# நரசுஸ் காபி...



நல்ல நட்பு போன்றது.
இதய பூர்வமானது.
மனமார மகிழ்விப்பது.

ஜீவனுள்ள
ஒரே காபி!

**நரசுஸ்
காபி**

தெர்மலோ முறை காபி!

ADWAVE/NCC/2598





**நரசுஸ் காபி கம்பெனி** சேலம் 636 007. கிளைகள்: தமிழ்நாடெங்கும்.

# தமிழ் வாழ்க! தமிலன் வால்க!

தமிழை இழிவு படுத்தும்
சினிமா— முதல்வர் எச்சரிக்கை!
அதை யொட்டி சில கற்பனைகள்!






தமிழ்ப்பண்டிதர்கள்
மூலம் தூய தமிழ்
கற்பிக்கிறோம்!

''கட்'டுன்னு வெட்டு 'டேக்' குன்னு.. வந்து..புரியலியே''... ''மொதல்லே தமிழ்ப் பண்டித ருக்கு இங்லிஷ் கத்துக் குடுக்கட்டும்... அப்புறம் அவரிடம் நாம் தமிழ் கத்துக் கலாம்''



பேசாம 'காபி'ன்னு சொல்லி யிருக்கலாம் இப்ப பாருங்க. கதாநாயகி அதைக் கேட்டு மயங்கியே விழுந்துட்டாங்க''





''கால் ஷீட்' வேணுமுங்க.''
''ஒப்பந்த நேர அழைப்புத் தான்' என்று சொன்னால் தான் ஒப்புவேன்!''

தொடர்ச்சி 64-ம் பக்கம் பார்க்க







''செகண்ட்ஷோ ரெண்டு டிக்கெட் குடு சார்!''
''முடியாது போம்... இரண்டாவது காட்சிக்கு இரண்டு நுழைவுச் சீட்டுக்கள் என்று சொன்னால்தான் வழங்கப்படும்!''

# கவலை தரும் கல்வி முறை



கிராமத்திலிருந்து பட்டணத்துக்குப் படிக்கப் போன குருசாமி விடுமுறையில் ஊருக்கு வந்தான். வழக்கப்படி, பட்டியில் அடைத்திருந்த மாடுகளை மேய்ச்சலுக்கு அவிழ்த்து விட்ட போது ஒன்று முரண்டு பண்ணி ஓட்டமெடுத்தது.

குருசாமி பேசாமல் பார்த்துக் கொண்டிருந்தான். தாத்தாவுக்குக் கோபம பழியாய் வந்தது. "என்னடா பயபுள்ளே.... பேசாமல் பார்த்துக்கிட்டு நிக்குற... மாடு அவுத்துட்டு ஓடுனாப் பாய்ஞ்சு போயி பிடிப்பானா... பொம்மையாட்டம் நிக்குறியே. இதுதான் ஒனக்குப் பட்டணத்துல படிக்கத் தர்ராகளா?" என்றார் அவர்.

படிக்கப் போன பிள்ளைக்குப் பழசெல்லாம் மறந்து போய் வெள்ளைச் சட்டை மனோபாவம் வந்து விடுகிறது. பரம்பரையாக ஊறி விட்ட தாத்தாவுக்கோ, பேரன் எவ்வளவுதான் படித்துப் பட்டதாரிஆனாலும் தெரிகிற விஷயங்கள் ஏன் தெரியவில்லை என்கிற கவலை.

இது கல்விமுறையின் கோளாறேயன்றிக் கல்வியின் கோளாறல்ல.

வீட்டுச் சமையலறை கிரைண்டர் தகராறு பண்ணினாலும் சரி, டீ. வி. யில் சின்னச் சின்னக் கோளாறுகள் ஏற்பட்டாலும் சரி, நமக்கு உடனே மெக்கானிக் வந்தாக வேண்டும். சாதாரண பவுண்டன் பேனா தகராறு பண்ணினால் கூட, குடைக் கம்பியில் நூல் விட்டுப் போனால் கூட, செருப்பில் வார் அறுந்து போனால் கூட — நாம் அதற்கென்று வைத்திருக்கிற ஆட்கள் வருகிறார்களா என்று காத்திருப்போமே தவிர, நாமாக எந்த வேலையையும் செய்ய மாட்டோம். நம்முடைய கையாலாகாத்தனம் வெறும் புத்தகப் புழுக்களான தலைமுறையைப் பெற்றெடுத்துக் கொண்டிருக்கிறது.

**✠ இந்தியாவில் எதிர்கால வாழ்க்கை பெரும் சுமையாக இருக்கப்போகிறது என்பதைக் குழந்தைகளுக்கு உணர்த்த இன்றே புத்தகச்சுமை ஏற்றுகிறார்கள்!**

'மலரவன்' என்று ஓர் அன்பர் எழுதுகிறார். "மக்களின் வாழ்க்கைத்தரம் உயர எதை வேண்டுமானாலும் இலவசமாகத் தரட்டும்... கல்வியை மட்டும் இலவசமாகக் கொடுக்கவே கூடாது."

அன்பரின் கருத்தையே நாம் அணுகிய பலரும் பிரதிபலித்தார்கள். பெரிய நகரங்களில் வசதி இருக்குமோ இருக்காதோ, எல்லோரும் அவரவருடைய தகுதிக்கு ஏற்ப 'மம்மி டாடி' சொல்லித் தருகிற நர்ஸரி பள்ளிகளையே நாடுகிறார்கள். ஐம்பது நூறு இல்லை. ஆயிரக்கணக்கில் கூட நன்கொடை தரத் தயங்குவதில்லை.

இலவசமாகக் கிடைக்கிற எந்தப் பொருளுமே தரமானதாக இருக்காது — கல்வி உட்பட. என்பது பலரின் அழுத்தமான கருத்தாகவே இருக்கிறது. தெருவுக்கு நாலு கள், சாராயக் கடைகளும் சினிமாக் கொட்டகைகளும் நிரம்பி வழிகிற புண்ணிய பூமியில் அடிப்படைத் தேவையான கல்விக்கு மட்டும் காக செலவிட மாட்டேன் என்றால், நியாயமா என்று கேட்கிறார்கள்.

# ஓர் உரத்த சிந்தனை

ஐந்து – பத்து ஆண்டுகள் குழந்தைகளின் கல்விக்காக என்று செலவிடுவதை ஒரு நியாயமான முதலீடு என்று தான் பார்க்க வேண்டுமே தவிர வீண் செலவு என்று கருதலாமா என்கிறார்கள்.

நியாயம் தான். ஆனால் புகழ் பெற்ற 'ஸ்டார்' பள்ளிக் கூடங்கள் நன்கொடை என்கிற பெயரில் பினாமி ரசீதுகளில் சம்பல் கொள்ளை நடத்துகிறார்களே இதை எங்கே போய்ச் சொல்வது?

ஒரு நர்ஸரி பள்ளிக்கூட ஆசிரியையின் அனுபவம்: திடீரென்று ஒருநாள் மதியம் பள்ளி விட்டுப் பத்து நிமிஷத்துக்கெல்லாம் குழந்தையை இழுத்துக் கொண்டு நீதி கேட்கிற கண்ணகி மாதிரி ஒரு அம்மாள் வந்தாள். ''என் பிள்ளை வேலை மெனக்கெட்டு ஹோம் ஒர்க் பண்ணிட்டு வந்திருக்கு. நீ திருத்தவே இல்லையே?''

பள்ளி பிரின்ஸிபாலும் அந்த ஆசிரியையும் ஆடிப் போனார்கள். இத்தனைக்கும் அந்தக் குட்டி எமன் நோட்டுப் புத்தகத்தை ஆசிரியரிடம் காட்டாமல் ஏமாற்றி விட்டது என்பதைச் சொல்லக் கூட அவர்களால் முடியவில்லை. உடனே நோட்டைத் திருத்தி மார்க் போட்ட அப்புறம் தான் அந்த அம்மாள் வீட்டுக்குப் போனார்.

✱ யூனிஃபார்ம் என்ற பெயரில் பொட்டு வைத்துக்கொள்ளக் கூடாது, பூ வைத்துக்கொள்ளக் கூடாது, பாவாடை, தாவணி கூடாது...



மாசம் இருபது முப்பது பணம் கட்டுகிற போது பெற்றவர்களுக்கும் பிள்ளையின் படிப்பில் அக்கறை வருகிறது. என்ன படிக்கிறாய் என்று கேட்கிறார்கள். தர்ம சத்திரம் மாதிரி போய் விட்டு வந்தால் யாருக்கு வந்த வாழ்வோ என்று பேசாமலிருந்து விடுகிறார்கள்.

## பிள்ளைகளின் தரம்

இன்றைய மாணவர்களின் பொது அறிவு விசாலப்பட்டிருக்கிறது. இந்தக் குழந்தைகளுக்குப் பாடம் நடத்தி அவற்றைத் திருப்திப் படுத்துவது சுலபமானதில்லை. துரதிர்ஷ்டம், இப்போதைய பல ஆசிரியர்களிடம் செய்தித்தாள் படிக்கிற பழக்கம் கூட இல்லை. பட்டம் வாங்கியதற்கு அப்புறம் எந்தப் புத்தகத்தையுமே இவர்கள் தொட்டதுமில்லை. இந்த கனமான இடைவெளியின் விசுவரூபம் தான் பல வகையான மாணவர் கிளர்ச்சிகள். போராட்டங்களை ஊக்குவிக்கின்றன.

மாணவர்களை விட அதிக விஷயம் தெரிந்து வைத்திருக்கும் ஆசிரியர்கள் மட்டுமே இப்போது மாணவர்களால் மதிக்கப்படுகிறார்கள். புதிது புதிதாக அவர்களுக்கு ஏதாவது விஷயங்கள் தேவைப்படுகின்றன. வெறும் அக்பர், ஷாஜஹான் அசோகர் மரநுகாய்களால் இனிமேல் எந்தப் பயனும் இல்லை.

## டி. வி. அரக்கன்

ரொம்பவும் அபூர்வமாக, அவர்களுக்கே தெரியாமல் தொலைக்காட்சியில் எப்போதாவது க்விஸ், மருத்துவம், கலை போன்ற சமாசாரங்களை ஒளிபரப்பி விடுகிறார்கள். (மன்னித்து விடுவோம்!) மற்றபடி திரைப் படங்களின் நாலாந்தரப் பாடல்களைத் தேடிப் பிடித்துத் தருகிற ஒளியும் ஒலியும் அல்லது ஏண்டா பார்த்தோம் என்று ஏற்கெனவே அலுத்துக் கொண்டு நொந்து போன சினிமாப் படங்கள், கேலிக்கூத்துக்களுக்கு வடிவம் தருகிற ஏழாம் தர நாடகங்கள் என்று இவை மட்டுமே டி. வியை நிறைத்துக் கொள்கின்றன. சனி, ஞாயிறு இரண்டு நாட்களும் எந்தக் குழந்தையும் டி. வி.யை மிஸ் பண்ணுவதில்லை. சினிமா சம்பந்தப்பட்ட எந்தக் காட்சியையும் மருளும் நிலைவுகளோ, வேறு எதுவோ பார்க்கா விட்டால் இவர்களுக்குப் பைத்தியமே பிடித்துவிடும்.

குழந்தைகளின் கணிசமான படிக்கும் நேரத்தை இந்த எலக்ட்ரானிக் பெட்டி விழுங்கி ஏப்பம் விட்டு விடுகிறது.

## சுற்றுப்புறம்.... சுகாதாரம்

பட்டியில் ஆடு, மாடுகளை அடைத்த மாதிரி... என்ற ஒரு நிலை இன்று எல்லா பள்ளிக்கூடங்களிலுமே இருக்கிறது. தனியார் பள்ளிகள் உள்படப் பலவற்றில் முறையான வகுப்பறைகள் கூடக் கிடையாது. தடுப்புச்

சுவர்கள் இல்லாமல் தட்டிகளை வைத்துப் பிரித்த வகுப்பறைகள் தான்.

வருடக் கணக்காய்க் கட்டட . நிதி என்று நூற்றுக் கணக்கில் வாங்கிக்கொண்டு கூரைக் கொட்டடிகளில் நடக்கிற பள்ளிகள் சென்னையிலேயே உண்டு.

அடுத்தது கழிவறைப் பிரச்சினைகள். பையன்களைப் பொறுத்த வரை சுகாதாரம் இல்லை என்றாலும் மரத்தடியோ சுவரோரமோ அவர்களுக்குப் போதும். ஆனால் பெண் குழந்தைகள் பாடுதான் மிகவும் சங்கடம். பல பள்ளிகளில் கழிப்பறை வசதிகள் அறவே இல்லை. அல்லது போதுமான அளவு இல்லை. இருந்தாலும் ஆசிரியர்கள் மட்டும் தான் பயன்படுத்தலாம். வயது வந்த பெண்களுக்கு எத்தனையோ பிரச்சினைகள். இந்த அடிப்படை வசதி கூட இல்லாத இடங்களில் அவர்களுடைய மனநலனும், உடல் நலனும் எவ்வளவு தூரம் கெடும் என்பதைப் பள்ளி நடத்துகிறவர்கள் சிந்திப்பதே இல்லை.

பள்ளிக்கு வெளியே — குச்சி ஐஸ் முதல்— கடலை உருண்டை வரை விதம் விதமான இன்பண்டங்கள். ஈயும், எறும்பும் மொய்த்துப் பிடுங்கிக் கொண்டு பிள்ளைகளைக் கவர்ந்திழுக்கும். வட்டத் தகடுகளைச் சுற்றிப் பத்து காசைப் போட்டு ஒரு ரூபாய் தருகிறேன் என்கிற மாதிரியான மினிசூதாட்டக் கடைகள், எல்லாம் தங்கு தடையின்றி நடக்கும். இதைப் பள்ளி நிருவாகிகள் — கண்டு கொள்வதே இல்லை.

சென்னையில் பல பள்ளி, கல்லூரி வாசல்களிலேயே போதை விவகாரங்கள் தாராளமாய் விற்பனை செய்யப்படுகின்றன.

பிள்ளைகளுக்குத் தேவையான ஆரோக்கியமான சத்துள்ள இன்பண்டங்களைப்பள்ளிகளே சலுகை விலையில் தயாரித்து விற்பனை செய்வதுடன், வெளியிடங்களில் கண்டவற்றை வாங்கி உண்ணக் கூடாது என்றும் கண்டிக்கலாம்.

## தமிழனும் நர்ஸரியும்

காளான்களை விட அதிக எண்ணிக்கையில் இப்போது நர்ஸரி பள்ளிக்கூடங்கள் முளைத்து விட்டன. கொஞ்சம் வசதியாக ஒரு வீடு மட்டும் கிடைத்து விட்டால் போதும். நீங்களே ஒரு நர்ஸரிப் பள்ளியைத் தொடங்கி விடலாம். ஐந்து வகுப்புகள், வகுப்புக்கு நாற்பது பிள்ளைகள் என்று சட்டுப்படுத்திக் கொண்டால் கூட சுலபமாக மாதம் இரண்டாயிரம், மூவாயிரம் ரூபாய்கிடைத்து விடும். பட்டம் வாங்கியோ வாங்காமலோ வீட்டில் பொழுது போக்குகிற பெண்கள் ஐம்பதோ நூறோ வாங்கிக் கொண்டு ஆசிரியை வேலைக்கு வந்து விடுகிறார்கள்.

பன்னிரண்டு மாதமும் பிள்ளைகள் சம்பளம் கட்டியாக வேண்டும். அட்மிஷன்நேரத்தில் உபரித் தொகைகள் உண்டு. பள்ளிகளின் தரம் — டிமாண்ட் இவற்றைப் பொறுத்து நூறு முதல் ஆயிரம் ஆயிரத்து ஐந்நூறு என்று நன்கொடைகள் தந்தால் தான் அட்மிஷன் கிடைக்கும்.

இருந்தாலும், பல பெற்றோர்கள் குறிப்பாகக் கணவனும் மனைவியும் வேலைக்குப் போகிறவர்களாக இருந்தால் மூன்று வயது ஆனவுடனேயே குழந்தைகளை எல்.கே.ஜி.யில் போட்டு விடுகிறார்கள். அவர்களைப் பொறுத்தவரை ஒரு குழந்தைகள் காப்பகம் ஆகவே பள்ளி பயன்படுகிறது.

'தமிழே உயிர் மூச்சு' என்றெல்லாம் வசனம் பேசுகிற பல பெரிய மனிதர்களுக்குக் கூடத் தங்கள் வீட்டுப் பிள்ளை பேரக் குழந்தைகள், எல். கே. ஜி.களில் 'மம்மி டாடி' கற்றுக் கொள்வது தான் பிறவிப் பயனாகத் தோன்றுகிறது.

ஒரு தாய் சொன்ன பதில் இது... ''பணம் கொள்ளைதான். என்ன செய்ய? குழந்தைகளுக்கு டிஸிப்ளின் வருகிறது. ஐந்து வயதான அப்புறம் பள்ளிக் கூடம் போ என்றால் அழுது அடம் பிடிக்கிற குழந்தைகளைப் பார்த்திருப்பீர்கள். நர்ஸரியில் சேர்த்து விட்டால் குழந்தைகளுக்குப் படிப்பு, பள்ளிக்கூடம் என்கிற பயம் போய் ஆசை வந்து விடுகிறது. தங்களுடைய ஷூஸுக்குத் தாங்களே பாலிஷ் போட்டுக் கொள்வது முதல் பல நல்ல பழக்கங்கள் சீக்கிரமே வந்து விடுகின்றன. தப்போ, சரியோ, மூன்று நான்கு வயசுக்குள்ளேயே மழலைத்தனமாகத் தங்களுக்குள் எதையோ இங்கிலீஷில் பேசுகிற வாண்டுகளைப் பார்த்தால் எவ்வளவு சந்தோஷமாக இருக்கிறது தெரியுமா?'' என்று அவர் கேட்ட போது நமக்கு ஆங்கிலம் அந்நிய மொழியா என்கிற சந்தேகமே வருகிறது.

ஒரு முக்கியமான விஷயம். ஆசிரியர் பயிற்சி என்று முறையான அனுபவம் எதுவும் இல்லாதவர்கள் சொல்லிக்கொடுத்து உருவாக்குகிற நர்ஸரி நாற்றுக்கள் தான் கல்வித் திட்டப்படி உருவான பள்ளிகளில் நடவு செய்யப்படுகின்றன. தரம் என்பது பாடங்களில் மட்டுமில்லை. சொல்லித் தருகிற மனோபாவத்திலும் தான் இருக்கிறது.

## மதச்சார்பு பிரச்னைகள்

சில பள்ளிகளில் யூனிஃபார்ம் கெடுபிடிகள் அதிகம். வெள்ளிக்கிழமையானாலும் கூடப் பெண் குழந்தைகள் பூ வைத்துக் கொண்டு பள்ளிக்குப் போகக் கூடாது. யூனிபார்ம் முறைக்கு விரோதம் என்று மிரட்டுகிறார்கள். ஓர் இந்துக் குழந்தையைப் போய்ப் பூ வைத்துக் கொள்ளக்கூடாது என்று மிரட்டுகிற போக்கு ஆரோக்கியமானதா என்று யாரும் சிந்திப்பதில்லை.

ஒரு முறை காஞ்சிப் பெரியவர்கள் சொன்னார்கள். ''பள்ளிகளில் ஏ ஃபார் ஆப்பிள் என்பதற்குப் பதிலாக... ஏ ஃபார் அர்ஜுனா. என்கிற மாதிரி சொல்லிக் கொடுக்கவேண்டும்'' என்று. இந்த யோசனையைக் கூட யாரும் செயல்படுத்தியதாகத் தெரியவில்லை. கிராமத்துப் பையனுக்குக் கொஞ்சமும் தெரியாத ஆப்பிளை அவன் பாடப் புத்தகத்தில் மட்டும் தான் பார்த்திருப்பான். நம்முடைய நாடு, பண்பாடு, முன்னோர்கள் — இவை பற்றியெல்லாம் பிஞ்சு வயதில் கற்றுத் தராமல் வேறு எப்போது கற்றுத் தரப் போகிறோம்?





புதியது

# பால் அடங்கிய ஃபாரெக்ஸ் திட உணவு

# அதிக சுவையானது அதிக முழுமையானது




**நீங்கள் பாசத்துடன் ஊட்டும் ஒவ்வொரு கவளமும் உங்கள் பாப்பாவின் வளர்ச்சிக்குச் சிறந்ததாகும்.**

பால் அடங்கிய ஃபாரெக்ஸ் திட உணவு. இதைக் கலப்பது எளிது. பாப்பாவுக்கு ஊட்டுவதும் எளிது.

பால் அடங்கிய ஃபாரெக்ஸ் திட உணவு. பாப்பாவின் வளர்ச்சிக்கு இன்றியமையாத புரதம் நிரம்பியது. மிக ஆரோக்கியமான இரத்தத்திற்குக் கூடுதல் இரும்புச்சத்து கொண்டது. உறுதியான பற்களையும் எலும்புகளையும் பெற சரியான விகிதத்தில் கால்ஷியமும் ஃபாஸ்ஃபரஸும் அடங்கியது. பாப்பாவின் மென்மையான ஜீரணசக்திக்கென முன்கூட்டிப் பக்குவம் செய்தது.

பால் அடங்கிய ஃபாரெக்ஸ் திட உணவு. ஒவ்வொரு கவளத்திலும் அதிக முழுமையான திட உணவு.

CLARION/B/GX/3/203 Tml

## வாழ்க்கைக்கு உதவாத ஏட்டுக் கல்வி

'குழந்தைகளையும் தலைமயிரையும் நாம் வளர்க்க முடியாது அவைதானேதான் வளர வேண்டும்' என்றார் ஒரு அன்பர். யோசனை பண்ணிப் பார்த்தால் இது உண்மை என்று புரியும். குழந்தைகளை அவர்கள் போக்கிலேயே வளரவிட்டு நாம் வேண்டுமானால் கண்காணிக்கலாம். எதையும் சுதந்திரமாகப் பார்த்து உணர்ந்து அறிந்து கொள்வதில் வளர்ந்தவர்களை விடக் குழந்தைகள் சூட்டிகையானவர்கள்.

பெங்களூரில் விசுவேஸ்வரய்யா மியூசியம் உள்ளது. அங்கே எந்தப் பொருளையும் யார் வேண்டுமானாலும் இயக்கிப் பார்க்கலாம். எது எப்படி இயங்குகிறது என்பதைக் குழந்தைகள் முதல் பெரியவர்கள் வரை யார் வேண்டுமானாலும் அனுபவ பூர்வமாகவே தெரிந்து கொள்ள வசதி பண்ணியிருக்கிறார்கள். நம்முடைய குழந்தைகளுக்கு இந்த மாதிரியான கல்வி தான் தேவை. வெறுமனே உருப்போட்டு மடமடவென்று காகிதத்தில் இறக்குமதி செய்கிற பாடங்களையெல்லாம் வங்காள விரிகுடாவில் கொண்டு போய்ப் போடுகிற நாள் என்று வருமோ?

உங்கள் குழந்தைகள் கையை அழுக்காக்கிக் கொண்டு, பேனாவைக் கழற்றிப் பழுதுபார்ப்பதையோ, கட்டைகளை வைத்து ஆணியடித்து ஒன்று சேர்ப்பதையோ கண்டால் முகம் சுளிக்க வேண்டாம். முடியுமானால் ஊக்கம் தர முயலுங்கள். இந்த நேரத்தில் நீங்கள் குழந்தைகளை 'விஷமம் பண்ணாதே' என்று மிரட்டுவீர்களானால் அவர்களுடைய அறிவு வளர்ச்சியைப் புறக்கணிக்கிறீர்கள் என்றுதான் பொருள்.

நம்முடைய கல்விக்கூடங்களில் 'க்ராஃப்ட்' என்று கைத்தொழில் பாடம் முன்பெல்லாம் பெயரளவுக்காவது ஒரு பீரியட் இருந்தது. இப்போது சுத்தமாகக் கிடையாது. செய்யும் தொழிலே தெய்வம் என்று பாடினால் மட்டும் போதுமா?

---

நண்பர்: ''கொத்தனார் கோவிந்தன் கிட்டே என்ன தகராறு நேத்து?''
மேஸ்திரி: ''பின்ன என்னங்க... எது கேட்டாலும் பூசி மொழுகுறான் ராஸ்கல்!''

ஆர். எஸ். சுப்பிரமணியன்.



## மதிப்பெண் விவகாரங்கள்

மாற்றுச் சான்று என்கிற டி. ஸி. யுடன் வருகிற குழந்தையை உரிய வகுப்பில் சேர்க்க வேண்டும் என்பது தான் விதி. ஆனால் பல பள்ளிக்கூடங்கள் தேர்வு வைத்துத் தரம் பார்த்துத் தான் சேர்த்துக் கொள்கிறார்கள். குறைவான மதிப்பெண்கள் பெறுகிற குழந்தைக்கும் அட்மிஷன் கிடைக்கும். ஆனால் நன்கொடை ரேட் கூடுதலாக இருக்கும். இது பள்ளிகளில் மட்டும் தான் என்பதில்லை. சென்னையிலுள்ள பல பிரபலமான கல்லூரிகளிலும் இதே நிலைதான்.

பள்ளி, கல்லூரிகளில் நன்கொடை என்பது இப்போது அங்கீகரிக்கப்பட்ட லஞ்சம் என்றே ஆகிவிட்டது.

## பாட நூல்கள், குறிப்பேடுகள்

இந்த ஆண்டு, பாட நூல்கள் விற்பனையில் அதிர்ச்சி தரும் விஷயங்கள் உள்ளன. ஆறு ரூபாய் என்று விலை அச்சாகியுள்ள நூலுக்குப் பட்டியலில் ஒன்பது ரூபாய் என்று விலை போட்டிருக்கும். விலைகள் திருத்தி அமைக்கப்பட்டிருக்கின்றன என்று சொல்கிறார்கள்.

போன ஆண்டு மலிவாக அச்சாகித் தேங்கி விட்ட பிரதிகளுடன், இந்த ஆண்டு அதிகரித்த செலவில் அச்சிட்டபுதிய பிரதிகளையும் சேர்த்து விற்பதால் ஒரே சீரான விலை வைத்தோம் என்று பாடநூல் நிறுவனத்தார் சொல்லக் கூடும். அது சரியான வாதமாகாது. ஏழைப் பிள்ளைகளுக்கு இலவசமாக வழங்குகிற பிரதிகளுக்குப் பழைய பதிப்பையும் பணம் பெற்று விற்பனை செய்கிற பிரதிகளுக்குப் புதிய பதிப்பையும் பயன்படுத்தினால் யாருக்கும் குழப்பமோ, மன வருத்தமோ ஏற்படாது.

கடைகளில் நாற்பது பக்கம் இருநூறு பக்கம் என்று விற்பனை செய்கிற நோட்டுப் புத்தகங்களின் பக்கங்களை நீங்கள் அப்படியே நம்ப வேண்டும். நம்பாமல் எண்ணிப் பார்த்தால் எட்டுப் பக்கம், பதினாறுபக்கம் குறையும். கேட்க முடியாது. கேட்டால் அப்படித்தான் என்பார் கடைக்காரர். அட்மிஷன் நெரிசலில் இந்த மோசடியை யாரும் பொருட்படுத்துவதில்லை.

பாடநூல் நிறுவனத்துக் குறிப்பேடுகளில் பக்கப் பிரச்சினை இல்லை. ஆனால் பள்ளிக் கூடங்கள் மூலம்தான் வாங்கிக் கொள்ள வேண்டும். சென்னையிலேயே நகராட்சி உட்படப் பல பள்ளிகள் பணம் போட்டுக் குறிப்பேடுகளை வாங்கிப் பிள்ளைகளுக்கு விற்பனை செய்ய முன்வருவதில்லை.

விளைவு மேலே சொன்ன மோசடி வியாபாரிகளிடம் அகப்பட வேண்டி வருகிறது.

—நிருபர்

மேலட்டை. வண்ணப்படம், புகைப்படங்கள்:

**யோகா**

## கவலைதரும் கல்விமுறை

# ஏழைகளுக்கு என்ன செய்யப் போகிறீர்கள்?

**ஐ. ஐ. டி. இயக்குனர் பேராசிரியர் டாக்டர் இந்திரேசன் பள்ளிக் கல்விபற்றிப் பேசுகிறார்:**

நான் இப்போது தான் ராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள ஒரு கிராமத்துக்குப் போய்விட்டு வந்தேன். அங்கே ஒரு விவசாயி என்னிடம் பேச வந்தார். பணக்கார விவசாயி கூட இல்லை. சாதாரண விவசாயி தான். வானம் பார்த்த பூமியை வைத்திருப்பவர். ''மாதாமாதம் இருபது ரூபாய் சம்பளம் ஆனாலும் பரவாயில்லை சாமி. என் மகனுக்கு இங்கிலீஷ்ல பாடம் சொல்லிக் கொடுக்கிற பள்ளிக்கூடம் இங்கே ஆரம்பிச்சாளங்களுக்கு உபகாரமாயிருக்கும்'' என்றார்.

● எந்தக் கிராமத்துக்குப் போனாலும் இங்கிலீஷ் மீடியம் பள்ளிக் கூடம் கேட்கிறார்கள். எந்த மாதிரிக் கல்வி தங்களுக்குத் தேவை என்பதைத் தேர்ந்தெடுக்க மாணவ மாணவியருக்குச் சுதந்திரம் இருக்க வேண்டும். அவர்களுக்கு எது நல்லது என்று தீர்மானிக்கும் தகுதியை நாமே எடுத்துக் கொள்ளலாகாது. இதனால் தான் நாட்டின் ஒரு பகுதி கல்வித் தரத்தில் உயர்ந்தும், இன்னொன்று தாழ்ந்தும் தெரிகிறது. ஒரு கிராமப்புற அல்லது சிற்றூர் மாணவனைவிட சென்னை — மதுரை — கோவையிலுள்ள மாணவருக்கு அதிகக் கவனிப்பு, வசதி, சலுகை எல்லாம் இருக்கிறது. இதிலும் பாருங்கள், அவதிக்குள்ளாகிறவர்கள் எல்லா ஜாதிக்காரர்களும்தான்.

● ஆரம்பக் கல்விதான் அடிப்படையானது. ஆனால் அந்த ஆதாரமான அஸ்திவாரம் சரியாக அமைவதில்லை. புகழ் பெற்ற பள்ளிக்கூடங்களில் பெற்றோர் அட்மிஷனுக்காகக் கியூ வரிசையில் காத்து நிற்க வேண்டியிருக்கிறது. இந்த நிலை மாறவேண்டும். நல்ல கல்வி எல்லோருக்கும் கிடைக்க வேண்டும். க்யூவில் நிற்காமல் எளிதில் கிடைக்க வேண்டும். எந்தப் பள்ளியில் சேர்த்தாலும் சிறந்த ஆரம்பக் கல்வி கிடைக்கும் என்ற நம்பிக்கை பெற்றோருக்கு ஏற்பட வேண்டும். யாருக்கெல்லாம் ஆரம்பக் கல்வி சிறந்த முறையில் கிடைக்கவில்லையோ அவர்கள் எல்லோரும் பிறகு கஷ்டப்படத் தான் செய்கிறார்கள். இதில் ஜாதி வித்தியாசம் என்பதே கிடையாது.

● முன்பெல்லாம் ஆசிரியர் தொழில் ஒரு தொண்டுப் பணியாகவே கருதப்பட்டது. இப்போது, மற்றத் தொழில்களைப் போல



● பேராசிரியர் டாக்டர் இந்திரேசன்

அதுவும் பொருளீட்டித் தரும் ஒரு வேலை; அவ்வளவுதான். நகரங்களிலுள்ள நடுத்தரக் குடும்பங்களில் ஆசிரியர் தொழில் விஷயத்தில் உற்சாகம் காணப்படுகிறது. ஆனால் கிராமப்புறங்களிலும் சிறிய ஊர்களிலும் இருந்து வரும் ஆசிரியர்களின் தரம் சிலாக்கியமானதாக இல்லை.

● சாதாரணமாகவே நமக்குத் தரத்தை விட, எண்ணிக்கையில் தான் கூடுதலான நாட்டம் இருக்கிறது! தொண்ணூறு சதவீத மாணவ மாணவிகள், பள்ளிக்கூடத்திலிருந்து சுமார் ஒரு கிலோ மீட்டர் வட்டாரத்துக்குள் இருக்கிறார்கள். இவற்றில் அதிகபட்சம் ஒற்றை ஆசிரியர் பள்ளிகளே. அதிலும், இந்த ஆசிரியர்கள் படிப்புச் சொல்லித்தருவது தவிர, தேர்தல் வேலைகளையும் குடும்பக் கட்டுப்பாட்டுப் பிரசாரமும் செய்யவேண்டியுள்ளது. போதாக் குறைக்கு அரசியல்கட்சிக்கு உள்ளூர் ஏஜெண்டாகவும் இருக்கவேண்டியிருக்கிறது. இரண்டு கிலோ மீட்டர் தூரத்துக்குள், இப்போதிருப்பதில் நாலில் ஒரு பங்கு பள்ளிக் கூடங்கள் இருந்தால், ஒரு பள்ளியில் நாலு ஆசிரியர்கள் இருக்க முடியும். செலவு அதேதான். ஒற்றை — ஆசிரியர் பள்ளியும் வசதிக் குறைவான பள்ளியும் இருப்பது எண்ணிக்கைக்கும் புள்ளி விவரக் கணக்குக்கும் வேண்டுமானால் வசதியாயிருக்கலாம். ஆனால் தரமான கல்வி கிடைக்காது.

● கிண்டர்கார்ட்டன் கல்வியை அரசாங்கம் ஆதரிப்பதில்லை. அதனாலேயே, வசதி உள்ளவர்களின் குழந்தைகள் இரண்டு வருட ஆரம்பக் கல்வியின் சலுகையை அநுபவித்து மற்ற குழந்தைகளை விடக் கல்வித் தரத்தில் சற்று உயர்ந்து நிற்கிறார்கள். இது வசதியற்ற குழந்தைகளுக்கு இழைக்கப்படும் துரோகமல்லவா?

● வளர்ந்து வரும் இன்றைய நவீன சமுதாயத்தில் வீடியோவின் பங்கு மகத்

தானது கல்வியைப் பொறுத்த வரை அது அப்படியொன்றும் செலவு அதிகமான தல்ல. மிக அருமையான தகவல்களை வெகு எளிதாக கேஸட்டுகள் மூலம் மாண வர்கள் மனத்தில் பதிய வைக்க முடியும்.

**கல்வியை ஒரு செலவு இனமாகக் கருதாமல் அதை ஒரு முதலீடாகக் கருதவேண்டும்.**

● ஓர் உதாரணம் சொல்கிறேன்: நம்நாட் டில் பலதரப்பட்ட கார்கள் தயாரிப்பில் சுமார் ஆயிரத்தைந்நூறு கோடி ரூபாய் மூலதனமாக இயங்கிக் கொண்டிருக்கிறது. இதே தொகையைக் கல்விக்குச் செலவிட் டால், அதன் பயன் பிரமிக்கத் தக்கதாய் இருக்கும். பத்து லட்சம் வீடியோ காஸெட் டுகள் கல்வியின் பொருட்டுத் தயார் செய் தால், அதனால் விளையும் வேலை வாய்ப்பு வசதியை நினைத்துப் பாருங்கள். மிகசிறந்த ஆசிரியர்களைக் கொண்டு காஸெட்டுகளைத் தயார் செய்ய வேண்டும். இரண்டு லட்சம் பேர் அநுபவிக்கும் கார்களுக்கு 1500கோடி ரூபாய் முதலீடு செய்வதைப் போல, இருநூறு லட்சம் மாணவ மாணவியருக்குப் பயன்படும் கல்வியை அளிப்பதிலும் தாராள மாகச் செலவிட வேண்டும்; ஒவ்வொரு மாவட்டத்திலும் இதற்கான நிகழ்ச்சி தயாரிப்பு நிலையங்களும், தாலுகா தோறும் இதற்கு விநியோக நிலையங்களும் அமைய வேண்டும்.

● கல்வியில் முதலீடு ஒரு முக்கிய அம்சம். தரமான பள்ளியில், மாதம் நூறு ரூபாய் செலவாகிறது என்றால், ஓர் அரசாங்கப் பள்ளி அல்லது அரசு மானியம் பெறும் பள்ளியில் இதில் பத்தில் ஒரு பங்கே ஆகிறது. ஒரு தரமான பள்ளி, ஏதோ ஆடம்பரத்தில் மிதக்கிற மாதிரி எல்லோரும் தவறாக நினைக்கிறார்கள். அவர்களுக்கும் பணத்தட்டுப்பாடு இருக்கிறது. இந்தத் தர மான பள்ளிக்கும் சாதாரண பள்ளிக்கும் இடையே இருக்கிற இடைவெளி கண்ணை உறுத்துகிற அளவுக்கு இருப்பதோடு, ஏழைகளுக்கு மனக்கஷ்டத்தையும் கொடுக் கிறது. இன்னும் சொல்லப் போனால், பல பள்ளிக்கூடங்கள், குழந்தைகளுக்கு அங்கே போகவே பிடிக்காத அளவுக்கு இருக்கின்றன. கல்வி ஒரு செலவினமே அல்ல; ஒரு முதலீடு என்பதை மீண்டும் சொல்கிறேன்.

● கல்வியில் போட்டி இருக்க வேண்டும். அப்போது தான் தரம் உயரும். யாரும் ஏக போக உரிமை கொண்டாடாமல் அரசு மேற்பார்வை பார்ப்பதோடு நிற்க வேண்டும். தில்லி, பம்பாய் நகரங்களுடன் ஒப்பிடும் போது தமிழ்நாட்டில் ஆரம்பக் கல்வியின் தரம் மெச்சிக் கொள்ளும்படியாய் இல்லை. நாட்டில் ஒரு பகுதியில் தரம் உயர்ந்தும், மற்றொரு பகுதியில் தாழ்ந்தும் இருந்துவரும் இந்த வேறுபாடு, ஜாதிப் பாகுபாட்டைவிட ஏன் — இனப்பாகுபாட்டை விட மோச மானது. இதை எப்படி நீக்க முடியும்? அதற்கு வழி இருக்கிறது: மாணவனுக்குத் தனக்கேற்ற கல்விக் கூடத்தையும் கல்வி முறையையும் தேர்ந்தெடுக்க நிறைய வாய்ப் புகள் கொடுங்கள்; சாய்ஸ் கொடுங்கள். நிலைமை சீர்ப்படும்.

● போக்குவரத்து முறையில் ஒரு மாற்றம் தேவை. நகரங்களில் ஐந்து முதல் பத்து கிலோ மீட்டர் வரை ஒரு மாணவன் போய் வர வசதி இருக்கிறது. ஒரு நகர வாசிக்கு இருக்கும் இந்தச் சலுகை ஒரு கிராமத்திறுவ னுக்கு மறுக்கப்படுவானேன்? போக்குவரத்து முறையில் மாற்றம் ஏற்படுத்தினால் கிராமங் களிலும் சைக்கிள் ரிக்ஷா போன்ற வாக னங்கள் பெருகினால் அங்கு சுய வேலைவாய்ப் புக்கள் பெருகவும் வாய்ப்பு உண்டு.

● கல்வி அமைப்பில் மாற்றம் தேவை என்றால், தேவையான பாடப் புத்தகங் களும் அவசியமான மாற்றங்களுக்கு உள்ளாக வேண்டும்.

● மாணவர்களுக்கு எது தேவையோ, அதை அளிக்க ஏன் அரசு தயங்குகிறது அல்லது மறுக்கிறது? தேவை ஒன்று இருக் கிறபோது, அதைக் கொடுக்க அரசு முயல வும், முன்வரவும் வேண்டும். மாணவர் களுக்கு இதுதான் தேவை, அல்லது இது போதும் என்று இவர்களாகவே நிச்சயித்துக் கொள்வது அபத்தமானது. நாளைய சமுதா யத்தின் நன்மைக்காகவும் நாம் இன்றே சிந்திக்கவும் செயல்படவும் வேண்டும்.

● சிறு குழந்தைகள் வெகு எளிதில் எந்த மொழியையும் சட்டெனப் படித்து விடும். இளம் வயதிலேயே பல மொழிகள் கற்கப் பள்ளிகளில் வசதி வேண்டும். திரைகட லோடியும் திரவியம் தேடு என்பார்கள். தம் உள்ளூர் மொழியை மட்டுமே வைத்துக் கொண்டு, திரைகடல் ஓட முடியுமா? பகவத் கீதையை சமஸ்கிருதத்தில் தான் படிக்க வேண்டும். திருக்குறளை ரசிக்கத் தமிழ்தான் வேண்டும். அதுபோல விஞ்ஞான அறிவியலை அறிந்து கொள்ள ஆங்கிலம் அவசியம்.

● தாய் மொழியில்தான் பாடங்கள் கற் பிக்க வேண்டும் என்றால், மறுபடியும் பணக்காரக் குழந்தைகளுக்கே, அது அனுகூல மாக முடியும். அவர்களுக்குப் போதனை மொழியைத் தேர்ந்தெடுக்க வாய்ப்புகள் இருக்கும். ஏழைகளுக்கு ஒன்றும் இராது. கிடைப்பதைப் பெற்று வாயை மூடிக் கொண்டு இருந்து விட வேண்டியதுதான்! இப்படிப் போனால் சமூகத்தின் ஒரு பகுதி வளர்ந்து வளம் பெறும்; மற்றொன்று தாழ்ந்து தளர்வுறும்.

குழந்தைகள் தமக்குத் தேவையான கல்வியைத் தேவையான முறையில் பெற வசதிகளும் சுதந்திரமும் நிறைய இருக்க வேண்டும்.

பேட்டி: **சித்தார்த்**

# கவலைதரும் கல்விமுறை

# தரம் உயர-



※ ஸ்ரீமதி ஸ்டெல்லா சௌந்தரராஜ்

தமிழக அரசின் முறைசாராக் கல்வி இயக்குநராகப் பணியாற்றி, சமீபத்தில் ஓய்வுபெற்ற ஸ்ரீமதி ஸ்டெல்லா சௌந்தரராஜ், அரசுக்கு இரண்டு பரிசுகள் கிடைக்கக் காரணமாயிருந்தவர். முறைசாராக் கல்வியில் அதிகப் பெண்களையும் குழந்தைகளையும் சேர்ப்பதில் சிறப்பாகப் பணியாற்றியதற்காக இந்திய அரசின் 25 லட்ச ரூபாய்ப் பரிசையும்; முறைசாராக் கல்வி பற்றித் தயாரித்த மிகச்சிறந்த அறிக்கைக்காக யுனெஸ்கோ அளித்த ஏழாயிரம் டாலர் பரிசையும் பெறக் காரணமாயிருந்தவர்.

சிவகாசி தீப்பெட்டித் தொழிற்சாலைகளில் பணிபுரியும் சிறுவர்—சிறுமியர் கல்விகற்க தினம் இரண்டு மணி நேரம், சம்பளத்துடன் அந்தந்த உரிமையாளர்களே ஒதுக்கித் தரச்செய்து அவர்களும் கல்வியறிவு பெறுவதில் ஓர் ஒழுங்கு முறையைக் கொண்டு வந்தவர்.

அவரது கருத்துக்கள் சில:

● மாணவர் சுமக்கும் புத்தகச் சுமைபற்றி—

நான் தில்லியில் கல்விச் செயலர்கள் கூட்டம் ஒன்றில் கலந்து கொண்டபோது, அப்போதைய பிரதமர் மொரார்ஜி தேசாய் தலைமை வகித்தார். அவர் சொன்னார்: நாங்கள் எல்லாம் படிக்கிற போது இத்தனை புத்தகங்கள் இல்லையே என்று. அமெரிக்காவில் எத்தனை மாணவர்களோ அத்தனை புத்தகங்கள் வகுப்பறையிலேயே வைக்கப்படுகின்றன. மாணவர்கள் அவற்றை வீட்டுக்கு எடுத்துச் செல்வதுமில்லை. சுமந்து கொண்டு பள்ளிக்கு வருவதுமில்லை. அது போன்ற ஒரு முறை இங்கேயும் வந்தால் தான் நிலைமை மாறும்.

● நமது ஆரம்பக் கல்விமுறை மேனாட்டுக் கல்வி முறை பற்றி—

ஒரு பேபி கிளாஸில் பெல் டெலிபோன் கம்பெனிக்காரர்கள் வந்து டெலிபோனை நிறுவி, அது எப்படிச் செயல்படுகிறது என்று பிராக்டிகலாகச் சொல்லித் தந்தார்கள். ஐந்து வயதிலேயே, டெலிபோன் இயங்கும் விதத்தை நேரிடையாக அந்தக் குழந்தை அறிந்து கொள்ளுகிறது. அவர்களுடைய பாடத் திட்டம் ஒரேயடியாக ஒரு வரையறைக்குள் உட்பட்டதாயில்லை. சௌகரியத்தை முன்னிட்டு மாற்றிக்கொள்ளும் வசதி இருக்கிறது. இங்கிருந்து ஆங்கில இலக்கியம் படிக்கச் சென்ற என் மகன், புத்தகத்தில் இருப்பதையே ஒருமுறை பதிலாக எழுதினான். 'புத்தகத்தில் இருப்பதையே நீ ஏன் எழுத வேண்டும்? நானே அதைப் பார்த்துப் படித்துக் கொள்ளுவேனே நீ என்ன நினைக்கிறாய், நீ என்ன புரிந்து கொண்டாய் என்பதையல்லவா எழுத வேண்டும்?' என்று ஆசிரியர் சொன்னாராம். நம்மைப் போல் அவர்கள் நோட்ஸ் துணையை நாடுவதில்லை.

● கல்வியின் தரம் உயர சில யோசனைகள்:

1. பல வேலைகளுக்குப் பட்டம் பெறத் தேவையேயில்லை. இத்தகைய வேலைக்கான தகுதியில் டிகிரி பெற்றிருக்க வேண்டும் என்ற கட்டாயத்தை நீக்க வேண்டும்.

2. குழந்தைகள் நூலகத்தை உபயோகித்துப் புத்தகங்களைப் படிக்கும் மனநிலையை உருவாக்க வேண்டும்.

3. கல்வி கற்பிப்பது ஆசிரியருக்கு மட்டுமே உரித்தான வேலை என்று பெற்றோர்கள் ஒதுங்கியிருந்து விடக் கூடாது. அவர்களும் தங்கள் குழந்தைகளின் கல்வியில் அக்கறை காட்ட வேண்டும்.

4. மாணவர்கள் விரும்புவதைத் தேர்ந்தெடுக்க நிறைய வாய்ப்புக்கள் இருக்கவேண்டும். 'பி. காம் கேட்டேன், கிடைக்கவில்லை' என்று விரக்தியடையும் நிலை வரக் கூடாது.

5. ஆசிரியர்கள், வகுப்புக்கள் எடுக்க முழுதும் தயாராகச் செல்ல வேண்டும். மாணவனை விட அதிகம் தெரிந்து கொண்டிருக்க வேண்டும். முறையாக உடையணிந்து, சரியான நேரத்துக்கு வகுப்பில் இருக்க வேண்டும்.

6. வகுப்பறைகள் ஒரே சந்தைக் கும்பலாக இருக்கக் கூடாது. ஒரு வகுப்பில் முப்பதிலிருந்து முப்பத்தைந்து மாணவர்கள் மட்டுமே இருக்க வேண்டும். அதிலும் ஆரம்பக் கல்வி அளிக்கும் வகுப்பில் இருபது மாணவர்களுக்கு மேற்படாதிருந்தால்நல்லது.

பேட்டி: சாருகேசி

# சில யோசனைகள்

# பத்துப் பைசா ஆஸ்பத்திரி



○ டாக்டர் வி. எஸ். கங்காதர் சர்மா

சில ஆண்டுகளுக்கு முன்னால் காஞ்சிப் பெரியவர்கள் தாம்பரம் வந்திருந்த போது டாக்டர் வி. எஸ். கங்காதர் சர்மா ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமை காலையிலும் ஏழைகளுக்கு வைத்தியம் செய்ய முன்வந்தார். இலவசமாக அல்ல, ஒவ்வொருவரிடமும் பத்துப் பைசா வாங்கிக் கொண்டுதான் மருந்து கொடுத்தார். ''இந்தப் பத்துக்காக எதற்கு? பிரிஸ்கிரிப்ஷன் எழுதும் காகிதச் செலவுக்காவது கட்டி வருமோ?'' என்றால் ''துட்டுக் கொடுத்து வைத்தியம் பார்த்துக் கொண்டால் தான் அருமை தெரியும்'' என்கிறார் சர்மா. இது ஆரம்பம்.

தாம்பரம் – சுற்று வட்டாரத்தில் உள்ள நாலு லட்சம் மக்களுக்கு முழு அளவில் மருத்துவ வசதியும், சமுதாய நலக் கல்வியறிவும் கிடைக்கச் செய்ய வேண்டும் என்பது முடிவான குறிக்கோள். இந்தத் திட்டத்தையொட்டி இப்போது 'ஹிந்து மிஷன் ஹாஸ்பிடல்' தொடங்கப்பட்டிருக்கிறது. இப்போதைக்கு ஒரு சின்ன அறையில் இரண்டே டாக்டர்களுடன் இந்த ஆஸ்பத்திரி நடைபெறுகிறது.

ஹிந்துக்களிடையே சேவா மனப்பான்மை கொண்டவர்கள் ஏராளமாக இருக்கிறார்கள். அவர்கள் ஆங்காங்கே அறப்பணிகளில் தங்களை ஈடுபடுத்திக் கொண்டிருந்தாலும் அமைப்பு ரீதியாக அதிகம் செய்யப்படவில்லை. இப்படி அமைப்பு ரீதியாகப் பலரும் செயல்படாத காரணத்தால் இவர்களின் சேவை நன்கு உணரப்படவில்லை. இதை மாற்றி அமைக்கும் முயற்சியில் ஒரு படி ஹிந்து மிஷன் ஆஸ்பத்திரி.

மருத்துவமனை உருவாகிக் கொண்டிருக்கிற இடம் இராணுவத்துக்குச் சொந்தமானது. ஒன்பது கிரவுண்ட் நிலம். இதை மருத்துவமனைக்கு வேண்டும் என்று கேட்டு ஒரு கடிதம் எழுதிப் போட்டுவிட்டு, கிட்டத்தட்ட மறந்தும் போய் விட்டார்கள். ஆனால் அரசாங்க உத்தரவு மருத்துவமனைக் குழுத் தலைவரின் வீட்டுக் கதவைப்போய்த் தட்டியதும் நம்ப முடியாத ஆச்சர்யம். இனமாக இல்லை, மலிவு விலைக்குத் தான் இடத்தை அரசு தந்தது என்றாலும், தாம்பரத்தில் நவீன வசதிகளுடன் கூடிய நல்ல மருத்துவமனை, நியாயமான கட்டணத்தில் கீழ்த்தர, நடுத்தர மக்களின் தேவைகளுக்காக உருவாக வழி பிறந்து விட்டதே!

எட்டு லட்ச ரூபாய் திட்ட மதிப்பீடு–இப்போதைக்கு. பத்து ஆண்டுகளில் நூறு படுக்கை வசதிகளுடன் ஒரு கோடி ரூபாய் மதிப்பில் முழுமையாக அமைக்கத் திட்டம் வைத்திருக்கிறார்கள்.

பள்ளிக்கூடங்களில் படிக்கும் குழந்தைகளின் பங்கும் இருக்க வேண்டும் என்கிற முறையில் நன்கொடை திரட்டியிருக்கிறார்கள். 25 கட்டங்களுடன் ஒரு அட்டை. ஸ்ரீராம நாம பத்திரம் என்று பெயர். ஒரு கட்டத்துக்கு ஒரு ரூபாய் நன்கொடை. இருபத்தைந்து குழந்தைகள் ஸ்ரீராம ஜெயம் எழுதினால் இருபத்தைந்து ரூபாய் ஆயிற்று. இப்படி சென்ற இரண்டு ஆண்டுகளில் முந்தே கால் லட்ச ரூபாய் குழந்தைகள் நன்கொடையாகவே சேர்ந்து விட்டது.

கிராமப்புற மருத்துவ சேவைக்காகக் காஞ்சிப் பெரியவர் வேன் ஒன்றை வழங்க இசைந்துள்ளார்கள். ஸ்ரீரங்கம் சுவாமிகள் மருத்துவமனையின் கண் சிகிச்சைக்கான கட்டடப் பகுதியின் பொறுப்பை ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள்.

சீக்கிரமே இந்த ஹிந்து மிஷன் மருத்துவமனை முழு அளவில் செயல்படத் தொடங்கி விடும்.

-பெஸ்பால்

○ ஹிந்து மிஷன் ஆஸ்பத்திரி கட்டிட வேலைகளை ஸ்ரீரங்கம் ஸ்ரீ ஸ்வாமிகள் பார்வையிடுகிறார்



# இந்துமதி

எழுதும்

# நெருப்பு மலர்

நவீனத் தொடர்கதை

## கல்கி

ஆகஸ்ட் 5௳

ஆண்டு மலரில் ஆரம்பம்

- ★ ரூ1000 முதல் பரிசு சிறுகதை
- ★ தராசு பதில்கள் (கேள்விக்கணைகள் தொடுக்கலாம்!)
- ★ வாழ்க்கை வளம் பெற...
  நிரந்தரப்' பயன்தரும் **இலவச இணைப்பு**
- ★ யோகாசன மகிமை –
  ஆரோக்கியம் பேணப் பயிற்சிகள்

— மற்றும் பல புதிய அம்சங்கள் —


மத்திய அரசு
பரூக் அப்துல்லா


எதிர்க் கட்சிகளின் ஆதரவு


ஹைஜாக்.. நிறுத்து! நிறுத்து!
ராஜதந்திரமின்மையின் விளைவு


தேசிய பாதுகாப்பு சட்டம்

டாக்டர் எம்.ஜி.ஆர்


காஷ்மீர் அரசு டிஸ்மிஸ்


என்ன, பெரிய பிளாஸ்திரி! பிச்சு எடுத்துடலாம்!




# கல்கி

1984 ஜூலை 15
மலர் : 42 இதழ் : 50
ரக்தாக்ஷி ஆனி 31




# அரசியல் சூதாட்டம்!

திரு ஜக்மோகன் ஜம்மு காஷ்மீருக்குக் கவர்னராக நியமிக்கப்பட்ட தினத்திலிருந்தே இத்தகைய ஒரு ஜனநாயகப் படுகொலையை எதிர்பார்த்துக் கொண்டுதானிருந்தோம்; நடந்தேவிட்டது! ஃபாரூக் அப்துல்லா கட்சியைச் சேர்ந்த 12 பேர் தாங்கள் இனி ஜி. எம். ஷாவை ஆதரிக்கப் போவதாகக்கூற, இ. காங்கிரஸ் எம். எல். ஏக்கள் ஷாவின் அமைச்சரவைக்குத் தங்கள் ஆதரவு உண்டென உறுதி அளிக்க, ஆளுனர் ஜக்மோகன், ஃபாரூக்கைப் பதவி நீக்கம் செய்து ஷாவை முதல்வராக்கி விட்டார். ஃபாரூக்குக்கு இனி மெஜாரிட்டி இல்லை என்பதால் இப்படிச் செய்ததாக ஆளுனர் கூறுகிறார். ஆனால் ஷாவின் கட்சிக்கும் பெரும்பான்மை கிடையாது. 77 எம். எல். ஏக்கள் உள்ள சட்டசபையில் இ. காங்கிரஸ் எம். எல். ஏக்கள் 26 பேரைச் சேர்த்தால் தான் ஷாவுக்கு ஒரு நபர் மெஜாரிட்டி (39) கிடைக்கிறது. இவர் கட்சியினர் சட்டசபையில் 13 பேர்தான். அதாவது பிரிந்து வந்த 12 பேர் உட்பட! இ. காங்கிரஸ் ஆதரவு உறுதி என்று கூறப்பட்டதின் பேரில்தான் 12 பேர் பணம், பதவிகளுக்கு ஆசைப்பட்டுக் கட்சி மாறியுள்ளனர் என்பது தெளிவு. இப்படி ஆசைகாட்டி, கட்சி மாறுவதற்கு இ. காங்கிரஸும், அதன் பெருந்தலைவர்களும் கொஞ்சமும் கூச்சமின்றி உடந்தையாக இருந்தது வெட்கக்கேடான விஷயம். ஜனநாயகத்தையே நையாண்டி செய்யும் போக்கு. ஷேக் அப்துல்லாவின் மகனுக்கும் மாப்பிள்ளைக்கும் இடையில் இருந்த விரோதத்தைப் பயன்படுத்திப் பகடை உருட்டுகிறது இ. காங்கிரஸ்.

ஆளும் கட்சிக்கு மெஜாரிட்டி இல்லை எனில் அதைச் சட்டசபையில் ஒரு மசோதா அல்லது தீர்மானத்தின் பேரில் வோட்டெடுப்பு நடக்கையில் மிக எளிதாக நிரூபித்து விடலாம். அதை விட்டுவிட்டு, ஆளுனர், ஃபாரூக்குக்கு மெஜாரிட்டி பலம் இல்லை என்று தாமாகவே முடிவு செய்து மக்களால் பதவியில் அமர்த்தப்பட்ட ஓர் அமைச்சரவையைத் திடுதிப்பென்று டிஸ்மிஸ் செய்தது வடிகட்டின சர்வாதிகாரச் செயல்.

எம். எல். ஏக்கள் கட்சி மாறுவதைத் தடுக்கக் காஷ்மீரில் சட்டமியற்றப் பட்டுள்ளது. அதன்படி இப்போது கட்சி மாறியவர்கள் வோட்டுரிமையே இழக்கிறார்கள் என்பதோடு பொதுத் தேர்தலுக்கே வழிவகுத்துமிருக்கிறார்கள். இந்தச் சிக்கலிலிருந்து தப்புவதற்காகப் பிரிந்து வந்த 12 பேரும் தனி நபர்களாக வரவில்லை என்றும் அசல் கட்சியே இவர்களுடையது தான் எனவும் ஃபாரூக்தான் பிரிந்து போகிறவர் என்றும் ஒரு மாயாஜால வாதம் செய்யப்படுகிறது. போதாக்குறைக்கு ஃபாரூக் மீது தேசத் துரோகக் குற்றச்சாட்டுக்களும் சுமத்தப்படுகின்றன. அத்தாட்சியிருப்பின் பகிரங்கமாக நடவடிக்கை எடுப்பதற்குப் பதில் பதவி நீக்கத்துக்கென சதி, சூழ்ச்சி என்றெல்லாம் இறங்குகிற இ. காங்கிரஸின் போக்கு நல்லவர்களைக் கூடப்பொல்லாதவர்களாக்கி விடும்!

மத்திய அரசின் தூண்டுதல் அல்லது சம்மதமின்றி ஜக்மோகன் இப்படி நடந்து கொண்டிருக்கப் போவதில்லை. பஞ்சாப், காஷ்மீர், அஸ்ஸாம் ஆகிய மூன்று எல்லைப்புற மாநிலங்களிலுமே பிரதமர் தமது சாணக்கியமற்ற நடத்தையால் ஆபத்தை விலைக்கு வாங்கிக் கொண்டிருக்கிறார்!

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா -பாரதியார்

தேவிகலா A/C
12.45 - 3.45 - 6.45 - 9.45
அகஸ்தியா 70MM
ஈகா A/C
தினசரி 3 காட்சிகள்

K.R.G

# ஆலய தீபம்

ஸ்ரீதர்

K.R.கங்காதரன்



### எதிர்காலம் உங்கள் கையில்

# பகுதிநேர பி.ஈ. படிக்கலாமா?



**நா**ன் என்ஜினீரிங் டிப்ளமா படித்தவன். ஒரு கம்பெனியில் வேலை செய்கிறேன். நான் பகுதி நேர இஞ்சினீரிங் படிப்பு படிக்க வழியுண்டா? என்கிறார் ராஜு... (மிஸ்டர் ராஜு...! கையெழுத்தை எவ்வளவு கிறுக்கலாக வேணுமானாலும் போடுங்கள். ஆனால் அதற்குக் கீழே கொஞ்சம் பெயரைத் தெளிவாக எழுதக் கூடாதா?) தாராளமாய்ப்படிக்கலாம். ஆனால் டிப்ளமா படித்தவர்கள் பார்ட் டைம் இஞ்சினீரிங் சேர வேண்டுமானால் குறைந்தபட்சம் மூன்று வருட வேலை அனுபவம் இருக்க வேண்டும். இது மூன்றரை வருடப் படிப்பு. அருகிலுள்ள இஞ்சினீரிங் கல்லூரியுடன் தொடர்பு கொள்ளுங்கள்.

• • • •

பி. எஸ்ஸி கடைசி வருடக்காரர்கள், போன வருடம் முடித்தவர்கள் என்று பதினுறு பேர்கள் மேலே என்ன படிக்க? எம். ஐ. டி-ல் சேர என்ன பண்ணனும்? இந்த ரீதியில் கேள்விகளை அனுப்பியுள்ளனர்.

இவர்களுக்கெல்லாம் சுருக்கமாய்ச் சில வார்த்தைகள்: பி. எஸ்ஸி. முடித்தவர்களுக்காக எம். ஐ. டி. யில் ஏரோநாடிக்ஸ், ஆட்டோ மொபைல், எலெக்டிரானிக்ஸ் இஞ்சினீரிங், இன்ஸ்ட்ருமெண்ட் டெக்னலஜி, ப்ரொடக்ஷன் டெக்னலஜி என்று நிறையப் பிரிவுகள் உள்ளன. பி. எஸ்ஸி. மார்க் அடிப்படையில் இங்கே அட்மிஷன். எம். ஐ. டி படிப்பு ஹாட் கேக் போல. உடனே நல்ல வேலை வாய்ப்பு.

• • • •

செங்காநல்லூர் மருதாசல மூர்த்திக்கு மெட்ரிகுலேஷன் எழுதியதுமே, கம்ப்யூட்டர் படிப்பில் சேர ஆசை.

மிஸ்டர் மூர்த்தி! பிளஸ் 2 லெவலில், தமிழ்நாட்டில் கம்ப்யூட்டர் படிப்புகள் இன்னும் அறிமுகமாகவில்லை. பி. எஸ். ஸி. டிகிரி அளவில் கூட இல்லை என்று தான் சொல்ல வேண்டும். (புத்தனம்பட்டி காலேஜில் இருக்கிறது. சுஜாதா சட்டுரை ஞாபகமிருக்கா?) இஞ்சினீரிங் கல்லூரிகளில் இருக்கிறது. பி. எஸ்ஸி. முடித்ததும் சேரலாம். மற்றபடி தனியார் கம்ப்யூட்டர் கோர்ஸ் நடத்துபவர்களுக்கும், செப்பிடு வித்தைக்காரர்களுக்கும் அதிக வித்தியாசமில்லை. அவர்கள் கீரி — பாம்பு சண்டை போடுவதைக் காட்டுவதாய்ச் சொல்லிக் கொண்டே இருந்து, காட்டாமல், சில்லறைக்குக் கைநீட்டுவார்கள். கம்ப்யூட்டர் கம்ப்யூட்டர் என்று ஆசை மயக்கி, (சில பேர் கம்ப்யூட்டரையே மாணவர்கள் கண்ணிலே காட்ட மாட்டார்கள்.) முன்னாலேயே 'சில்லறை'யை வாங்கிக் கொண்டு விடுவார்கள். நர்ஸரி ஸ்கூல் ஆரம்பிப்பதும், கம்ப்யூட்டர்கோர்ஸ் நடத்துவதும் இப்போது நல்ல பணம்பண்ணுகிற வழி. இஞ்சினீரிங் காலேஜ்கள் தவிர, தனியார் கம்ப்யூட்டர் கோர்ஸ்களில் சிலவும் நல்லதுதான். இதில் பிரச்னை என்னவென்றால் யார் நிஜமாகவே நன்றாய்ச்சொல்லித் தருகிறார்கள் என்று கண்டுபிடிப்பதுதான். இதற்கு ஒரே வழி அங்கே படித்த மாணவர்கள் சிலரிடம் விசாரிப்பது தான்.

• • • •

கல்லிடைக் குறிச்சியிலிருந்து வந்துள்ள கடிதத்தின் சாரம்:

எல்லாப் பல்கலைக்கழகங்களும் எம். பி. ஏ. வை நேரடியாகத்தானே சொல்லித் தருகிறார்கள். தபாலில் இதைப் படிக்க முடியாதா? சில தனியார் கல்வி நிலையங்கள் சொல்லித்தரும் எம். பி. ஏ. (ரெகுலர்மற்றும் கரஸ்பாண்டன்ஸ்) எத்தனை உபயோகமாய் இருக்கும்? (என்ன கல்லிடைக்குறிச்சியாரே, முகவரி, பெயர் இல்லாமல் மொட்டைக்கடிதாசு போல எழுதியிருக்கிறீர்?)

எந்தப் பல்கலைக் கழகமுமே தபாலில் எம். பி. ஏ. சொல்லித் தருவதாய்த் தெரிய



வில்லே. தனியார் கோர்ஸ்கள் பற்றி எதையும் (தரம், வேலே வாய்ப்பு) சொல்ல முடியாது. போன கேள்வியின் பதில் இதற்கும் பொருந்தும்.

• • • •

கும்பகோணம் ஆர். பி. குமாருக்கு எலெக்டிரானிக்ஸில் ஜாப் ஓரியண்ட்டட் கோர்ஸ் படிக்க ஆசை, எங்கே படிக்கலாம் என்று கேட்டுள்ளார்.

பி. எஸ்ஸி. கடைசி வருடம் படிக்கிற நீங்கள் தொடர்ந்து எம். ஐ. டி. அல்லது எம். எஸ்ஸி. (பிஸிக்ஸ்) டிரை பண்ணலாம். எலெக்டிரானிக்ஸ்தான் என்றில்லே. ரேடியோ அண்ட் டெலிவிஷன் இஞ்ஜினீரிங்; ஏர் கண்டிஷனிங் அண்ட் ரெஃப்ரெஜிரேஷன் இஞ்ஜினீரிங் என்று கூடப் பல ஜாப் ஓரியண்டட் படிப்புகள் உள்ளன. இதற்கெல்லாம் நல்ல வாய்ப்பு இருக்கிறது. ஓ. கே.?

• • • •

என்னுங்க மிஸ். சாந்தி, நீங்க கேட்டிருக்கிற பல்வேறு ஸ்காலர்ஷிப்புகள் பற்றிய இன்பர்மேஷன்களே அடுத்த வாரம் பார்க்கலாமே!

-எஸ். சந்திரமௌலி

---

உனது பெயரை
மீண்டும் மீண்டும்
உச்சரித்த போது தான்
இனிப்புக்கு இன்னொரு
அர்த்தம் இருப்பதையே
எனது நா உணர்ந்து கொண்டது.

அன்று நடந்த
கவிதைப் போட்டிக்கு
எல்லோரும் கவிதையோடு
வந்திருந்தார்கள்.
நீ மட்டும்
உன் கண்களோடு வந்திருந்தாய்—

காதலுக்குக் கண்ணில்லே
என்பது பொய்
உன் கண்களேப் பார்த்த
பிறகுதானே
உன்னைக் காதலிக்கத் துவங்கினேன்.

நான் இத்தனை முறை
உச்சரித்தும்
உன் உதடுகள் ஏன்
மௌனத்தையே உச்சரிக்கின்றன?

-வெ. இறையன்பு



# வேங்கை வனம்

## அத்தியாயம் 12

### ஏப்பம் விடும் எமன்

அரண்மனையை அடைந்த தியாகவல்லி, இச்செய்தி கேட்டு அதிர்ந்து போனாள்.

இந்த ஏழு நாட்களாக...

திருமேனிக்கு ஏற்பட்ட அவஸ்தாபேதங்களின் போக்கு...

மாமன்னர் அடிக்கடி அழைத்து மறைமுகமான சொற்களில் வெளிச்சம் காண விழைந்து விவாதித்த நிலைமை...

சிந்தித்துச் சிந்தித்து ஒரு பூரணத்தையுணர முடியாத தவிப்பில் திணறினாள் தியாகவல்லி.

திருமேனியின் நெஞ்சில் இப்போது வேங்கைமார்பன் எவ்வாறு திருமஞ்சனமாடுகிறாரோ...

~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

'ஒட்டு' வைத்தல் முறை மூலம் சுவைமிக்க பழவகைகள், மலர்கள் உருவாக்கி வருவதைப் பற்றிக்கேள்விப் பட்டிருக்கிறோம். அந்த வரிசையில் இப்போது புதிய கிழங்கு வகையொன்றை ஜெர்மன் நிபுணர்கள் உற்பத்தி செய்திருக்கிறார்கள். தக்காளியையும், உருளைக் கிழங்கையும் சேர்த்து உருவான இந்தப் புதிய கிழங்கு, தக்காளியை விட ருசி மிக்கதாகவும் நீண்ட நாள் கெடாமல் இருப்பதாகவும் இதைக் கண்டுபிடித்த ஹாம்பர்க் பல்கலைக் கழக நிபுணர்கள் கூறியிருக்கிறார்கள்.

—ஆர். எஸ். சுப்பிரமணியன்.




ஒருநாள் — ஒரே ஒருநாள் திருமேனியின் சந்திப்பு இதற்கிடையில் கிடைக்காதா? அழைப்பு வராதா? என்று எதிர்பார்த்தாள்.

அந்தச் சந்திப்பில் எப்படியும் திருமேனியின் மனக்குகையில் புகுந்து, வேங்கை மார்பனின் ஓவியம் எவ்வாறு வரையப்பட்டிருக்கிறது என்பதனைத் தெள்ளத் தெளிவாக அறிந்து செயல்பட இருந்தாள் தியாகவல்லி.

அவ்வாறு திருமேனியின் நெஞ்சில் வேங்கையூற்று இருக்குமானால், உடனடியாக ஓலையனுப்பி, திருமேனித் திருமணத்தைக் கொஞ்ச நாளைக்கு நிறுத்தி வைக்கும்படி கேட்டுக் கொண்டிருப்பாள்.

ஆனால்... காரியம் தலைக்கு மீறிப் போய் விட்டது. பொறுமையாக இருந்து செயல்பட வேண்டும். இனி இதன் திருப்பத்துக்கான எல்லை, எந்தத் திசையில் எவ்வாறு நிர்ணயிக்கப்படுமோ?

நெஞ்சில் அலைபுரள அந்தப்புரம் நாடிச் சென்று மேன்மாடத்தை நெருங்கியபோது..

மாமன்னருக்கும் மகளுக்கும் பெருத்த சொல் யுத்தம் நடந்து கொண்டிருந்தது.

விவாத யுத்தத்தில் மூழ்கிக் காணப்பட்ட திருமேனியின் முகத்தில் செவ்வானம் படர்ந்திருந்தது. ஏதோ ஓர் அஸ்தமனத்தை அது எடுத்துக் காட்டுவது போல விளங்கியது.

முகத்திலும் தேகத்திலுமாக வியர்வைத் துளிகள், விலையுயர்ந்த பாண்டிநாட்டு முத்துக்களுடன் விலை பேசிக் கொண்டிருந்தன.

''என்னப்பா நான் தரைமீனாகத் துடித்துக் கதறுகிறேன்; நீங்கள் நுரை நீராய் அமர்த்தலாகக் குமிழியிட்டுக்காணப் படுகிறீர்கள்?''

''அதுதான் அவ்வப்போது வெடித்துக் கொண்டிருக்கிறதே மகளே.''

''இங்கே வெடிப்பது எரிமலை.''

''அதற்கென்ன செய்ய வேண்டும் என்கிறாய்?''

''யுத்தம்! யுத்தம்!''

''இதற்கு ஒரு யுத்தமா?''

''அவமானத்தை எவ்வாறு துடைப்பீர்கள்?''

''இதில் அவமானம் இருப்பதாகஎனக்குத் தெரியவில்லை. நீயும் இப்பிறவியில் எவனையும் மணக்கப் போவதில்லை. அப்படி மணப்பதாக

—கோவி. மணிசேகரன்
~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~~

வாக்குக் கொடு! நாளையே யுத்தப் பிரகடனம் ஒலிக்கும்!''

''.......''

''ஏன் மௌனம்? உனது சீற்றம் இதிலும் கர்ஜிக்கட்டும்!''

''என்னை ஓர் ஆடவன் கரம் பற்றித் தூக்கிய பிறகு, இன்னொரு ஆடவனின் கரம் பிடிக்க எனது மனம் ஒவ்வாது!''

'ஆ! தமிழ் மகளைப் பார்க்கிறேன்! தமிழ்ச்சங்கத் தலைவியைப் பார்க்கிறேன்!' தியாகவல்லியின் நெஞ்சு பூரித்துக் கொள்கிறது.

மாமன்னர் புன்முறுவலுடன் எழுந்து கொண்டார்.

''மகளே! உனது போக்கினைப் பார்க்கிற போது வேங்கைமார்பன், உனது சிலைக்கு மாலையிடுவதில் எந்தவிதத் தவறுமில்லை. அவனும் உன் போலச் சபதம் கொண்டிருக்கலாம் அல்லவா? உனது சிலையை மணந்தாவது நிறைவு கொள்ளட்டும்!''

''அப்பா!''

—அதிரத் தக்க கர்ஜனை.

''நீ உன் விஷயத்தில் தீர்வுக்கு வா! நான் என் விஷயத்தில் ஒரு தீர்மானத்துக்கு வருகிறேன்.''

அவர், புறப்படுமுன் தியாகவல்லியைச் சில கணங்கள் நின்று கவனித்து, அந்தக் கவனிப்பில் ஓர் ஆழத்தைப் புதைத்துப் புறப்பட்டுச் சென்றார்.

திருமேனி திக்பிரமை பிடித்தவளாக விழிக்கலானாள்.

நின்றுகொண்டிருக்கும் தியாகவல்லியைக் கவனிக்கிறாள், திருமேனி.

பொங்கி வந்த துயரத்தையெல்லாம் மடை திறந்து விட்டவளே போன்று தியாகவல்லியைச் சேர்த்துக் கட்டிக்கொண்டு 'ஓ' என்று கேவிக் கேவியழுதாள்.

என்ன சொல்லித் தேற்றுவாள் தியாகவல்லி!

''இளவரசி! அமைதி! எந்த விஷயத்துக்கும் ஒரு தீர்வு உண்டு; இதுகுறித்து ஒரு தீர்வுக்கு வருவோம்!''

அணைப்பிலிருந்து விடுபட்ட திருமேனி, ''என்ன தீர்வு வேண்டிக் கிடக்கிறது?'' என்றாள். ஆவேசம் பொங்கி எழுந்தது.

''தியாகவல்லி! நீ என்னவோ வேங்கை மார்பனை நாகரீகத்தின் நாயகன் என்றும், தமிழ்ப்பண்பாட்டின் தலைவன் என்றும், பெண்ணுக்கு இலக்கணம் எழுதிய பெருங்காப்பியன் என்றும் இடிமுழக்கம் செய்தாய்! இதுவா, ஒரு நாயகனின், தலைவனின், பெருங்காப்பியனின் செயல்? அநாகரீகத்தின் அஸ்திவாரமாகத் தெரியவில்லை? தமிழ்ப்பண்பாட்டின் தறுக்சனைத் தெரியவில்லை! பெண்ணைப் புரிந்து கொள்ளாத பேடிமையாகத் தெரியவில்லை? வேங்கைமார்பன் சுத்த வீரனல்ல; ஒரு ரகசிய ராட்சஸன்! நீயும் புரியாமல் புகழ்மாலை சூட்டிவிட்டாய்!''

வேங்கைமார்பனை இந்த அளவுக்குப் பழிப்பதைத் தியாகவல்லியால் பொறுமையுடன் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. அவள் பளிச்சென்று மறுமொழி கூறினாள்:





''இப்போதும் சூட்டுவேன்! இளவரசி! இதையே நீங்கள் ஒரு மெய்க் காதலாக ஏன் எண்ணிப் பார்க்கக் கூடாது? உங்கள் மீது கொண்ட காதல் வெறிச் செயலாக ஏன் நினைத்துப் பார்க்கக் கூடாது? அப்போதாவது உங்கள் மனம் தளர்வு கண்டு, திருமணத்துக்கு இசைவு தராதா என்று அவர் எதிர்பார்க்கலாம் அல்லவா?''

பளார்...

இடது கன்னத்தில் விழுந்தது பலமான அறை...

''வேங்கை மார்பனுக்காக நீ வாதாட மட்டும் வரவில்லை; அந்த ரகசிய ராட்சஸனுக்காகச் சூதாடவும் வந்திருக்கிறாய்! இப்போதாவது புரிந்து கொள், வேங்கை மார்பன் உன்னை வெறுத்ததன் ரகசியத்தை!''

கன்னத்தைத் தடவிக் கொண்டே வெளியேற முற்பட்டாள் தியாகவல்லி.

அவள் செல்வதைத் திருமேனி தடுத்து நிறுத்தவில்லை.

நேரே தனதறை நாடிச் சென்று மஞ்சத்தில் விழுந்து, தலை புதைத்து, கண்களில் நீர்வற்ற அழத் தொடங்கினாள், திருமேனி.

தியாகவல்லியின் வருகைக்காக இல்லத்தில் காத்திருந்தான் காளிங்கன்.

அங்கேயும் எரிமலை வெடிப்பதைப் போன்ற ஆயத்தம் அமைதியில் மூழ்கி இருந்தது.

உள்ளே நுழைந்த தங்கையின் முகத்தில் கவலை கப்பிக் கொண்டிருந்ததைக் காளிங்கன் கவனித்தான்.

''என்ன தியாகவல்லி? போட்ட திட்டம் வேறு; நடந்த திருப்பம் வேறு! மன்னர் இதுகுறித்து ஆவேசப்படவில்லையாமே! நான் அப்போதே சொன்னேன், இந்த வார்ப்படப் படத்தை அனுப்ப வேண்டாம் என்று. இப்போது யுத்தம் நிகழ்வதற்கு மாறாகப் பித்தம் பிடித்திருக்கிறது!''

அறை வாங்கிய வெறுப்போடு அண்ணனைக் கூர்ந்து கவனிக்கிறாள், தியாகவல்லி. வெறியோ, வெறி...

''அப்படியே யுத்தம் மூண்டால், வென்ற பிறகு, பாண்டிய மாமன்னர், கானப் பேரெயிலைத் தூக்கி உங்கள் கையிலா வைத்து விடுவார்? இல்லை பிரதிநிதியாக்குவாரா? நீங்கள் யார்? அப்படி என்ன முக்கியத்துவம்? இங்கே பிரதிநிதியாக அனுப்ப ஆட்களா இல்லை? நீங்கள் ஒரு ராஜத்துரோகி என்பது அவருக்குத் தெரியாமலா இருக்கும்?''

அயர்ந்து போனான் காளிங்கன்.

''தியாகவல்லி! நீதானே ராஜதந்திரம் பேசினாய்?''

''பேசியது உண்மை! எப்போது? மதுரைக்குப் புறப்பட்ட பிறகு! புறப்படும்முன் நீங்கள் இதனை யோசிக்க வேண்டாமா?''

''போகட்டும்; இப்போது என்ன செய்வது? நான் யாருக்காக இவ்வளவையும் செய்கிறேன்?''

அவனது குரலில் இறக்கம் இருந்தது. விழிப்பால் ஏற்பட்ட விதிர்ப்பு இருந்தது.

தியாகவல்லியின் மார்பு மேலெழுந்து அடங்கியது. அவளுக்கே திசை புரியவில்லையே...

''அண்ணா! இப்பொழுதும் ஒன்றும் மூழ்கிப் போய் விடவில்லை. ஓலைவந்த பிறகு ஏற்பட்ட எதிருணர்வு இப்படி: திருமணமே நடந்த செய்தி வருகிற போது, மன்னருடைய மனம் மாறலாம் அல்லவா? நாம் கவனமாக இருக்க வேண்டும்.''

ஆறித்த நாளில் இந்த விசித்திரத் திருமணம் நடந்தேறி விட்ட செய்தியை ஒற்றர்கள் மூலம் அறிந்தார், பாண்டிய மாமன்னர்.

திருமணத்துக்கு யார், யார் வந்திருந்தார்கள் என்பதனையும் கேட்டறிந்துகொண்டார். மனம் மட்டும் பதறவில்லை.

அந்த நேரத்தில் புலவர் மாங்குடி மருதனும், பேரமைச்சர் தும்பூர் சாத்தனும், மகாசேனாதிபதி காவிதி அழகன் நம்பியும் அங்கு வருகை தந்தனர்.

அனைவரையும் வரவேற்று அமரச் செய்தார் பெருவழுதிப் பாண்டிய மாமன்னர்.

''மன்னா சிந்தித்துப் பார்த்ததில் இது அவமானமான செயலாகவே படுகிறது'', என்றார் மாங்குடி மருதனார்.

''எது?''

''சிலை மணம் ''

''வேங்கைமார்பன் மட்டும் இதனை அவமானமாக நினைத்திருக்க மாட்டான் என்று நாம் எப்படி முடிவு கட்டி விட முடியும்? கரும்பு என்று ஓலையில் எழுதி மென்று தின்னும் கதை என்பது அவனுக்குப் புரியாததா? அவன் தான் என்ன செய்வான்? திருமேனியின் சுந்தரக் கனவுகள் அவனை இப்படி ஒரு சுகம் காணச் செய்திருக்கிறது''

''அவனது கனவில் தான் ஏற்கெனவே ஒருத்தி விளையாடி இருக்கிறாளே.''

''அது பொய்யானது என்றுதான் உரியவளான தியாகவல்லியே சொல்லிவிட்டாளே ''

''அவள் சொற்களை எவ்வாறு நம்புவது?''

''நான் நம்புகிறேன்; மேலும் கேட்க வேண்டாம்.''

''ஏன் கேட்கக் கூடாது?'' — என்று கணீரென்று பெண் குரல் ஒலிக்கக் கேட்டு அனைவரும் கவனிக்க...

பட்டத்தரசி பாண்டிய மாதேவி உள்ளே பிரவேசித்தாள்.

''தியாகவல்லியே, ஏன் இப்படி ஒரு ரகசிய தூதாக வந்திருக்கக் கூடாது?'' என்றாள் பாண்டியமாதேவி, அருகிலிருந்த ஆசனத்தில் அமர்ந்தவாறு.

''நிச்சயம் அவள் அவ்வாறு வரவில்லை. அவளை நன்றாக அறிவேன். வேங்கைமார்பனும் திருமேனியும் ஒன்று சேரத் தனது உயிரையும் தியாகம் செய்யக் கூடியவள். அவள் வந்ததே திருமேனியைத் திருத்தத் தான். இதற்குள் வேங்கைமார்பன் திருவிளையாடல் புரிந்து விட்டான்.''

''இப்போது இந்தக் கறையை எப்படிப் போக்குவது?''

''இது கறையா? ஒரு புதிய சரித்திரம். அவன் என்ன உன் மகளைக் கடத்திச்சென்று கடிமணம் செய்து கொண்டான்?''

''அது ஒன்றுதான் மீதம்! அதுவும்நடக்க வேண்டும் என்று ஆசைப்படுகிறீர்களா?''

''பாண்டியப் பேரரசின் பயம் அவனது நெஞ்சில் இருக்கிறது.''

''அவன் எல்லாப் பேரரசுகளையும் ஏப்பம் விடும் எமன் என்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன்.''

''அதுவும் எனக்குத் தெரியும். அதனால் தான் அந்த வீரத்தை நான் நேசித்தேன்!''

''வீரத்தை நேசிக்கிறீர்களோ, தூஷிக்கிறீர்களோ, இந்த அவமானத்தைப்போக்க ஒரே வழி, அந்தச் சிலையை நாம் எப்படியாவது கடத்தி வந்து விட வேண்டும்.''

''வேங்கைமார்பன்கம்மாவா இருப்பான்?''

''போர் தொடுப்பான்; பார்த்து விட வேண்டியதுதான்.''

மாமன்னர் சிறிது நேரம் யோசிக்கிறார்.

அந்த யோசனைக்கு இடம் தராமல் பேரமைச்சரும் பெரும் புலவரும் இடைபுகுந்தனர்.

''நாங்களும் இதனை ஆதரிக்கிறோம் மன்னர்பிரானே.''

மாமன்னர் மெல்லச் சிரித்துக் கொண்டார். பட்டத்தரசி பக்கமாகத் திரும்பி, ''தேவி! இதனை உன் மகள் மறுத்தால்?'' என்றார்.

''அவள் மறுக்க மாட்டாள்.''

''அவள்தான் எதை ஏற்கிறாள்; எதை மறுக்கிறாள் என்பதே புரியவில்லையே.''

அன்னையைப் பின் தொடர்ந்து வந்து, வாசலுக்கு அப்புறமே நின்றுவிட்ட திருமேனி, இப்போது உள்ளே நுழைந்தாள்.

''ஏற்பதுவும் ஏற்க மறுப்பதுவும் அதனதன் தன்மையைப் பொறுத்திருக்கிறது அப்பா! இந்தக் கருத்தை அம்மாவிடம் சொல்லியனுப்பியவளே நான்தான். சிலை மதுரைக்கு வந்து சேர வேண்டும்.''

''முயன்று பார்ப்போம்.''

மாமன்னர் எழுந்து கொண்டார். தொடர்ந்து அனைவரும் எழுந்து கொண்டனர்.

தீர்மானமாகச் சொன்னாள் திருமேனி: ''அடுத்த பிறைக்குள் சிலை என் முன்னே நிற்க வேண்டும்!''

உக்கிரப்பெருவழுதிப் பாண்டிய மாமன்னர் ஆலோசித்தவண்ணம் மேன்மாடம் நோக்கி நடந்தார்.

அன்றிரவு...

தியாகவல்லி ஒரு தீர்க்கமான முடிவுக்கு வந்து, இனி, 'இறகு போனால் என்ன? சிறகு போனால் என்ன?' என்கிற துணிவுடன் சங்கேத முறையில் ஓலை எழுதுகிறாள். அவன் மட்டும் நாளைய வரை நிதானித்து இருந்தால், சிலையைக் கடத்தி வர வேண்டும் என்று பாண்டிய அரண்மனையில் தீர்மானித்த செய்தியையும் குறிப்பிட்டிருப்பாள். கதை வேறு விதமாகவும் திரும்பி இருக்கலாம்.

அந்த விஷயமும் ஒரு சோதனையேபோல அமைந்து விட்டது. (தொடரும்)

# விசேஷ பரிசுகளுடன்

# டெபாசிட் சேகரிப்பு விழா!

(15-7-84 முதல் 31-10-84 வரை
வாடிக்கையாளர்களின் வேண்டுகோளுக்கிணங்க நீடிக்கப்படுகிறது)

**22%** வட்டி வழங்கப்படுவதுடன்
**V. I. P. BRIEF CASE**
அன்பளிப்பும் வழங்கப்படும்.

மற்றும் மேற்படி காலத்தில் டெபாசிட் செய்பவர்கள் ஒவ்வொருவரும் விசேஷ பரிசு போட்டியில் கலந்துகொள்ளும் வாய்ப்பை பெறுவார்கள். சென்னை கிளையில் டெபாசிட்தாரர்கள் முன்னிலையில் நடைபெறும் பரிசு போட்டியில் வெற்றி பெறுபவர்களுக்கு

முதல் பரிசு
**கலர் TV**
(அல்லது ரூ. 10,000/- ரொக்கம்)



இரண்டாவது பரிசு
**குளிர் சாதனப் பெட்டி**
(அல்லது ரூ. 5000/- ரொக்கம்)



மூன்றாவது பரிசு
**வாஷிங் மெஷின்**
(அல்லது ரூ. 4000/- ரொக்கம்)



நான்காவது பரிசு
**பிளாக் & ஒயிட் TV**
(அல்லது ரூ. 3000/- ரொக்கம்)



## கவர்ச்சிகரமான வட்டி விகிதங்களில் பிக்சட் டெபாசிட்டுகள் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன

| 1-வருடம் | 2-வருடங்கள் | 3-வருடங்கள் | 5-வருடங்கள் |
|---|---|---|---|
| 17% | 18% | 19% | 22% |



## பாலாஜி மோட்டார் & ஜெனரல் பைனான்ஸ்

(Hire Purchase Financiers for Motor Vehicles)

சென்னை : 91, உஸ்மான் ரோடு (சிவா-விஷ்ணு கோவில் அருகில்)
தி. நகர், சென்னை-600 017 போன் : 447186 - 442218

பெங்களூர் : 24/1-A, மார்கோஸா ரோடு (10வது கிராஸ்)
மல்லேஸ்வரம், பெங்களூர்-560 003 போன் : 366971

திருச்சி : 22, மதுரை ரோடு (முதல் மாடி) திருச்சிராப்பள்ளி-620 008

பாண்டிச்சேரி : 11, கேரு தெரு (கனரா வங்கி எதிரில்) பாண்டிச்சேரி-605 001

தஞ்சாவூர் : எண் : 2 & 3, முதல் மாடி, ஜி. ஏ. கனால் ரோடு,
தஞ்சாவூர்-613 001, போன் : 1626

திருவண்ணாமலை : 14/A, ஆனைக்கட்டி தெரு, திருவண்ணாமலை-606 601 போன் : 463

பட்டுக்கோட்டை : 9-A, தலையாரி தெரு, பட்டுக்கோட்டை-614 601 போன் : 453

CHARI

---

## டெபாசிட்தாரர்களை அறிமுகம் செய்பவர்களுக்கும் அன்பளிப்பு வழங்கப்படும்.

# போட்டோ பிடிக்க வாரீகளா?

முருந்தன்

**தேர்தலில் கள்ள வோட்டுக்களைத் தவிர்க்க, வாக்காளர்களுக்கு அவர்களது போட்டோவுடன் கூடிய அடையாளச் சீட்டுகள் வழங்கப்படும். —செய்தி**

**1**

அம்பிகா போட்டோ ஸ்டுடியோ...
தெற்கு ஆவணி மூல வீதி,
மதுரை.
15.6.84

பெறுநர்:
மாவட்டத் தேர்தல் அதிகாரி,
மதுரை.

ஐயா,

வாக்காளர்களைப் புகைப்படம் எடுக்கும் சிறப்பான பணியினை எங்களிடம் ஒப்படைத்திருப்பது குறித்து மகிழ்ச்சி. தங்களது ஆணையில் கண்டுள்ளபடி, இலந்தைப்பட்டி முதல் கழுதைப்பாளூர் ஈறாக, பதினெட்டு கிராமங்களுக்கும் உடனடியாக என் உதவியாளர்களுடன் சென்று, வாக்காளர்களைப் படமெடுத்து, விரைவில் அவற்றை அனுப்பி வைக்கிறேன்.

நன்றி.

தங்கள்,
இ. மு. அம்பிகாபதி.
உரிமையாளர்.

**2**

மாவட்டத் தேர்தல் அதிகாரி அலுவலகம்,
மதுரை.
20.7.84.

பெறுநர்: இ. மு. அம்பிகாபதி,
அம்பிகா போட்டோ ஸ்டுடியோ,
மதுரை.

ஐயா,

வாக்காளர்கள் — புகைப்படம் எடுத்தல் தொடர்பாக

மேற்படி பணி எந்த அளவில்உள்ளது. இதுவரை எத்தனை வாக்காளர்களைப் படம் எடுத்துள்ளீர்கள். இன்னும் எத்தனை பேர் பாக்கி. உத்தேசமாக எப்போது இப்பணி முடிவடையும் — இதுபற்றி மறு தபாலில் இந்த அலுவலகத்துக்குத் தெரிவிக்குமாறு கோரப்படுகிறது.

மு.ரா.நல்லமுத்து
மாவட்டத் தேர்தல் அதிகாரி.

**3**

24.7.84.

உயர்திரு.
மாவட்டத் தேர்தல் அதிகாரி அவர்களுக்கு,

தங்கள் கடிதம்.

இதுவரையில் இலந்தைப்பட்டியில் மட்டும் மொத்தம் 43 படங்களை எடுத்துள்ளோம். மீதி எவ்வளவு என்பதைத் தயவு செய்து தாங்களே கணக்குப் போட்டுப் பார்த்துக் கொள்ளுமாறு வேண்டுகிறேன். தவறாக நினைக்க வேண்டாம். விரிவான பதிலெழுதி நேர விரயம் செய்ய விருப்பமில்லை.

தங்கள்,
இ.மு. அ. பதி.

**4**

மாவட்டத் தேர்தல் அதிகாரி அலுவலகம்,
மதுரை.
28.7.84.

பெறுநர்: இ. மு. அம்பிகாபதி, மதுரை.
(முகாம்) இலந்தைப்பட்டி.

ஐயா,

1. ஏறக்குறைய மூன்று வாரங்கள் கழிந்த பின்னரும் தாங்கள் 43 படங்களே எடுத்திருப்பதாகக் கூறுவது வியப்புக்குரியது மட்டுமல்ல, விசாரிக்கத் தக்கதுமாகும். ஏன் இத்தனை மெத்தனமாக இருக்கிறீர்கள் என்பது குறித்தும்; குறிப்பிட்ட கால கெடுவுக்குள் வேலையை முடித்திட இயலும் என்ற நம்பிக்கை தங்களுக்கு உள்ளதா என்பது பற்றியும் விரிவாகப் பதிலெழுதக் கோரப்படுகிறது.

2. தாங்கள் இத்தனை காலம் நேர விரயம் செய்து விட்டு, இவ்விலாகாவிற்குக் கடிதம் எழுதுவதுதான் நேர விரயம் போலக் குறிப்பிடுவது முறையன்று என்ப

---

பெர்லினில் ஒரு மியூசியம் இருக்கிறது. இங்கு திருடர்கள் பயன்படுத்தும் கொடிய ஆயுதங்களையும், உலகிலேயே பெரிய திருட்டைச் செய்த குற்றவாளிகளின் புகைப்படங்களையும் வைத்திருக்கின்றனர். 16 வயதிற்கு மேற்பட்டவர்கள் மட்டுமே இங்கு அனுமதிக்கப்படுகின்றனர். —ஜா. ரவி.






தும் தங்களுக்குச் சுட்டிக் காட்டப்படுகின்றது.

மு. ரா. நல்லமுத்து.
மாவட்டத் தேர்தல் அதிகாரி.

**5**

31.7.84.

மதிப்புக்குரிய மாவட்டத்தேர்தல் அதிகாரி அவர்களுக்கு,

சூடான தங்கள் கடிதம்கிடைத்தது!

'மூன்று வாரங்களில் 43 படங்கள்தானா?'' என்று வியந்திருக்கிறீர்கள்.

இதற்குச் சற்று விரிவாகப் பதிலளிக்க வேண்டியுள்ளது.

கிராமங்களில் வீடு வீடாகச் சென்று படமெடுப்பதில் தாமதம் என்பது தவிர்க்க முடியாதது. காரணங்கள் பலப்பல.

நாங்கள் படமெடுக்க வரப் போவதைத் தண்டோரா போட்டோ, போஸ்டர் ஒட்டியோ அறிவிக்கவா முடியும்? எனவே இலந்தைப்பட்டிக்கு நாங்கள் சென்றபோது வாக்காளர்கள் யாரும் முகத்தைக் காட்டத் தயார் நிலையில் இல்லை. குடும்பத் தலைவர்கள் பலர், வயல்களைப் பார்வையிடச் சென்றிருந்தார்கள். சிலர் அயலூருக்கு. சிலர் காவல் நிலையத்துக்கு (வரப்பு, நீர் பாய்ச்சுவதில் தகராறு, கொடுக்கல், வாங்கலில் அடிதடி..) சரி, பெண்மணிகளைப் படமெடுப்போம் என்றாலும் அவர்கள் வேலில் தயார் ஆவதாக இல்லை. நகர, நாகரீக ஊடுருவல் காரணமாக, பௌடர், கிவுடர் பூசி ரெடி ஆவதற்கு வெகு நேரம் எடுத்துக் கொண்டார்கள். சில தாய்மார்களுக்கு இடுப்பை விட்டு இறங்காத உடும்புக் கைக்குழந்தைகள். அவற்றைச் சமாதானப்படுத்தி, இறக்கும் பொறுப்பு எங்கள் தலையில் தான் விழுந்தது.

ஒரு முக்கியமான விஷயம்; தங்கள் வீட்டிலுள்ள மொத்தப் பேரையும் நாங்கள் படம் எடுக்க வேண்டும் என்று நிறையப் பேர் பிடிவாதம் செய்தார்கள். ''அரசு ஆணை அப்படியில்லை. வாக்காளர்களை மட்டுமே படம் பிடிப்போம்'' என்று சொன்னாலும், ''சொந்தச் செலவில் எடுத்துக் கொள்கிறோம். ஏதோ ஆயுளில் முதல் தடவையாகப் வீடு தேடி வந்திருக்கிறீர்கள். டவுனுக்குப் போய்ப் படமெடுக்க எங்களுக்கு நேரமோ வசதியோ ஏது?'' என்றார்கள். இரங்காமல் இருக்க முடியவில்லை. எங்கள் மனம் என்ன, பாறாங்கல்லா?

கிராமங்களில் வருங்கால நட்சத்திரங்களுக்குப் பஞ்சம் ஏது? இளவயதுக்காரர்களான ஆண்களும், பெண்களும் கூடுதல் பிரதிகள் வேண்டுமென்று கேட்டார்கள்—சினிமா தயாரிப்பாளர்களுக்கு அனுப்புவதற்காக. இம்மாதிரி வேண்டுகோளை எப்படிப் புறக்கணிப்பது? யார் கண்டார்கள் —அவர்களில் ஒருவர் பிரபல நட்சத்திரமாகி, காலக்கிரமத்தில் மாநில முதல்வராகவும் வருவதற்கு வாய்ப்பு இருக்கிறதல்லவா?

அதை நாம் கெடுப்பானேன் என்கிற நல் லெண்ணம் காரணமாக, அத்தகைய ஆர்டர் களைத் தனியே குறித்துக் கொள்ள வேண்டிய தாயிற்று. (கூடுதல் கிளார்க் வேலை)!

வயதான கிழவிகளை மசிய வைப்பது படு சிரமமாக இருந்தது. படம் எடுக்க வேண்டுமென்றால் ஐந்து செகண்டாவது வாயை மூடிக் கொண்டு இருக்க வேண் டாமா? ஏதாவது ஊர்க்கதை, பழங்கதை, பழமொழி, குட்டிக்கதை என்று சொல்லிக் கொண்டே இருந்தார்கள். கேட்கும்போது 'உம்' கொட்டத் தவறிய என் உதவி யாளர்கள் இருவர், வெற்றிலைப் பாக்கு இடிக்கும் இரும்பு உலக்கையால் கன்னத்தில் இடி வாங்கிக் கொள்ள நேர்ந்தது. (அநா வசிய வைத்தியச் செலவு).

சிட்டுக்குருவி லேகியம் சாப்பிடாமலே வீரியம் பெற்றிருந்த சில ஆண்கள், ''நம்ம ரெண்டாவது சம்சாரத்தோடு சேர்ந்து ஜம்னு ஒரு படம் எடுய்யா!'' என்று வற்புறுத்தி, எடுக்க வைத்தார்கள். மறுத்திருப்போம் — அவர்களது கையில் விச் சரிவாள், பிச்சுவா, சின்னக் கோடாலி, உடைந்த சாராயப் புட்டி இவை எதுவும் இல்லாமல் கேட்டிருந்தால். போதாக் குறைக்கு, இவ்வாறு படம் எடுத்துக் கொண்டவர்களின் முதல் மனைவிமார்களின் ஏச்சுக்களையும் (''அந்தப் படுபாவி சொன்னா உனக்கு எங்கேய்யா புத்தி போச்சு? என் சக்க(ா)ளத்தியை அவரோட சேர்த்து வச்சு, படம் எடுத்த உங் கையிலே பாம்பு பிடுங்க!'') கேட்டுச் சகித்துக் கொள்ள வேண்டியதாயிற்று.

இவர்களெல்லாமே இப்படியென்றால் கிரா மத்துப் போக்கிரிகளைப் பற்றிச் சொல்லத் தேவையில்லை. அவர்களைப் படமெடுப்பதற்கு நாங்கள் பட்ட சிரமங்கள் ஏராளம்! ஏராளம்! அவற்றைச் சாவகாசமாக எழுதி யனுப்புகிறேன்.

ஏன்தான் இந்த வேலையில் தலை கொடுத் தோம் என்று என் புத்தியை எந்தெந்தப் பொருள்களாலோ அடித்துக் கொண்டு பொறுமையாகப் பணியைத் தொடர்ந்து வருகிறேன். எனக்குக் கொடுக்கப்பட்டுள்ள எல்லாக் கிராமத்து அனைத்து வாக்காளர் களையும் எப்போது படமெடுத்து முடிப் போம் என்பது கடவுளுக்குத் — மன்னிக்கவும் இயற்கைக்குத்—தான் தெரியும்.

தங்கள்,
பதி.

பின்குறிப்பு: சென்ற கடிதத்தில் நேர விரயம் என்று நான் குறிப்பிட்டது எனது நேரத்தை அல்ல. (அதுதான் ஏற்கெனவே விரயமாகிக் கொண்டிருக்கிறதே!) தங்களது பொன்னான நேரத்தையே குறிப்பிட்டேன்.

## 6

மாவட்டத் தேர்தல் அதிகாரி அலுவலகம்,
மதுரை.
6.8.84.

பெறுநர்: இ. மு. அம்பிகாபதி,
(முகாம்) இலந்தைப்பட்டி.

ஐயா,

தங்களது நீ...ண்...ட கடிதம்.

ஏதோ தங்களுக்கு மட்டும்தான் அத்த கைய பிரச்னைகள் இருப்பது போல் நொந்து கொண்டு எழுதியிருக்கிறீர்கள். வாக்காளர் களைப் படமெடுக்கும் வேலையை ஏற்றுக் கொண்டுள்ள பலரும் உங்களைப் போலவே புலம்பியிருக்கிறார்கள் என்பதனை உங்களது கவனத்துக்குக் கொண்டு வர விரும்புகிறோம். நகரங்களில் சந்து, பொந்துகளில் புகுந்து புறப்பட்டும், அடுக்கு மாடிக் கட்டடங்களில் ஏறி இறங்கியும் அலுத்துக் களைத்துப்போன புகைப்படக்காரர்களின் சோக வரலாறுகளை நீங்கள் கேட்க நேர்ந்தால் உங்கள் பாடு எவ்வளவோ தேவலை என்று புரியும்.

அரசு ஆணையை நிறைவேற்றியே ஆக வேண்டிய கட்டாயத்தில் உள்ளோம் —உள் ளீர்கள். எனவே எப்பாடு பட்டாவது குறிப்பிட்ட கெடுவுக்குள் படங்களை எடுத்து முடித்திடுமாறு கோரப்படுகிறது.

தங்களது நேரம் தான் இப்போது முக்கி யம். அதனை விரயம் செய்யாதீர்கள்.

மு. ரா. நல்லமுத்து.
மாவட்டத் தேர்தல் அதிகாரி.

## 7

## தமிழ்நாட்டில் புதுவித நோய்! மனநோய்மருத்துவமனை நிரம்பிவழிகிறது!

சென்னை, ஆக. 10—.

மனநோய் மருத்துவமனையில் சேர்க்கப் படுபவர்களின் எண்ணிக்கை திடீரென்று அதிகரித்துள்ளது. ஒருவித புது நோய்தான் இதற்குக் காரணம்.

### பயங்கரக் கூச்சல்

இந்த நோயினால் பாதிக்கப்படும் நோயாளிகள் 'காமெரா', 'போட்டோ', போன்ற வார்த்தைகளையும், 'க்ளிக்' என்ற ஓசையையும் கேட்டால் பயங்கரமாகக் கூச்சல் போடுகிறார்கள், என்று சென்னை மனநோய் மருத்துவமனையைச் சேர்ந்த ஒரு டாக்டர் கூறினார். மேலும், இந்த நோயாளிகள் எல்லோருமே போட்டோ ஸ்டுடியோ உரிமையாளர்களாக இருப்பது அதிசயமான ஒற்றுமை என்றார்.

## 8

இத்தனை கலாட்டாக்களுக்குப் பிறகு நடந்த ஒரு தேர்தலில், அடையாள அட்டை யுடன் ஒரு வாக்காளர் வோட்டுச் சாவ டிக்குப் போனார். அங்கே—

''ஏம்பா! முருகேசன் என்பது நீதானா? போட்டோவுக்கும், உன் தோற்றத்துக்கும் வித்தியாசம் இருக்கே?''

''போட்டோ எடுக்க வந்தப்போ ஒரு பிரார்த்தனைக்காக தாடி, மீசை வச்சிட்டிருந் தேங்க... அப்பாலே திருப்பதிக்குப் போய் முடி கொடுத்திட்டு வந்திட்டேன்... அது தான் காரணம்!''

# வேடிக்கை

அவள் சாதாரண பெண். யாரையும் எளிதில் வசீகரிக்கும் வடிவம் இல்லையென்றாலும், பிறருக்கு லேசான அச்சம் இருக்கும்படி செய்துவிடுகிற ஏதோ ஒன்று அல்லது அத்தகைய ஆளுமை அவளிடம் இருந்தது.

அவள் என்னோடு நான்கு வருடங்கள் ஒன்றாகப் படித்தவள். ஆனாலும் நான் அவளிடம் பேசினதில்லை. சில சமயங்களில், அவள் என்னை அணுகிய போது 'இல்லை' 'உண்டு' என்பதோடு எனது பேச்சு முடிந்து போனது. கடைசி நாள் வரையிலும் அவளிடம் வலியப் போய்ப் பேசியதில்லை. (எனது சக மாணவர்கள் அப்படித்தான் செய்தார்கள்.) அவளைப் பற்றித் தனிப்பட்ட அபிப்பிராயங்கள் கூட என்னிடத்தில் எதுவும் கிடையாது.

அவள் மேடையில் பேசுவாள். நான் கேட்டதில்லை. சகமாணவி ஒருத்தி பேசுகிறாள். கேட்க வேண்டாமா? என்று நானும் ஒருமுறை வழக்கத்துக்கு மாறாகக் கூட்டத்தில் சென்று கலந்து கொண்டேன். அப்போது பத்மராஜ் பக்கத்தில் இருந்தான். அது மட்டும் ஞாபகம் வருகிறது. கூட யார் இருந்தார்கள் என்று நினைவில்லை. அவள் பேசத் தொடங்கியதும் அவளை அவமானப்படுத்தும்படி கத்திக் கூச்சலிட்டு விசிலடித்தார்கள். அதில் நானும் ஒருவன். ஆனாலும் அவள் விடாது பேசினாள். போதாதென்று மின்தடை ஏற்பட்டது. அவள் பேசுவதே கேட்கவில்லை. இதற்கெல்லாம் அவள் அழுதுவிடவில்லை. தைரியமாக நின்றாள். இதனால் அவளுக்குக் ''கண்ணகி'' என்று பெயரிட்டு அழைத்தார்கள்.

எனக்குத் தெரிந்தவரையில் என் நண்பர்கள் கிண்டல் செய்த எல்லா நேரங்களிலும் நானும் உடன் இருந்திருக்கிறேன். மௌனமான சாட்சியாக இருந்திருக்கிறேன்.



ஒரு முறை மோகன் சிவப்பு சட்டை போட்டு வந்தான். அவளும் சிவப்புப் புடவை அணிந்து கொண்டு வந்தாள். போதாதா? இருவரையும் இணைத்துக் கேலி பேசினார்கள்.

அப்போதும் கூட அவள் ஒன்றும் சொல்ல வில்லை. இயல்பாகவே இருந்தாள்.

கேலி சற்று மிகைப்பட்ட போது அவ ளால் தாங்க முடியவில்லை. புத்தகங்களை வாரிக் கொண்டு வெளியே ஓடினாள்.

இப்போது எல்லோரும் கயநினைவுக்கு வர, இராமகிருஷ்ணன் — மாணவர் தலைவன் — 'மச்சி புரொபசர் இட்ட போருடா மச்சி' என்றான். அவன் அதைப் பற்றிக் கவலைப் படவில்லை. ஆனால் பத்மராஜ் பின்னாடியே ஓடி னான். நானும் கொசுறு போல ஓடினேன். என்னைப் பற்றிப் புகார் வராது என்பது எனக்குத் தெரியும். அந்தக் குழுவில்—மொத் தம் ஏழுபேர் — நான் அமைதியின் வடிவமா கப் பேசப்பட்டேன். இருந்தாலும் ஓடினேன்.

அவள் பேராசிரியரிடம் செல்லவில்லை. நேராகப் பெண்கள் ஓய்வு அறைக்கு ஓடினாள். படிகளில் இறங்கும் போது பத்மராஜ் மடக்கிக் கொண்டான்.

''தமாஷ்தானே செய்தாங்க. நீ ஏன் கோவிச்சுக்கறே...?''

அவன் எப்படி எடுத்த எடுப்பில் 'நீ' என்று சொன்னான் என்பது எனக்கு இது வரை புரியவில்லை.

அழுதாள். இடமான மனகடையவள் என்பது பொய்யாகும்படி அழுதாள்.

''பிரதர்ஸ் மாதிரிதானே பழகறேன். ஏன் நீங்க எல்லாரும்...''

பிறகு சமாதானம் ஏற்பட்டது.

கடைசிநாள் ஆட்டோகிராப் வாங்கிய போது சகோதரருக்கு என்று ஆரம்பித்து, சகோதரி என்று முடித்திருந்தாள்.

இதுபோல விஷயங்கள் பொதுவானவை. அவள் ஒருமுறை என்னை மட்டும் தனியாகச் சம்பந்தப்படுத்திய விஷயம் ஒன்றே ஒன்று. என்னை ஓவியன் என்று சிபாரிசு செய்தது தான்.

பொருளாதார துணைப் பேராசிரியர் பால சுப்பிரமணியம் அழைத்ததாக ஆள் வந்து சொல்லிவிட்டுப் போனான்... போனேன்.

---

''இந்த பாங்கில் கொள்ளையே நடந்ததில்லையா? எப்படி அது?''

''முக்கியமான கொள்ளைக்காரர்கள் பலருக்கு இங்கே அக்கவுண்ட் இருக்கே!''

—இமை. அ. கதிர்வேல்.




---

''என்னய்யா, நல்லாப் படம் போடுவி யாமே?''

அவள் அங்கே இருந்தாள்.

நான் தலையசைத்தேன்.

''எப்படியெல்லாம் போடுவே?''

''எப்படியும்.''

''அதில்லையா, கார்ட்டூன் பே டுவியா, மாடர்ன் ஆர்ட்டா, லைன் ஒர்க்கா... எது?''

''எல்லாமும் தெரியும்.''

இது பொய். ஓரளவு பழக்கம் உண்டு. அவ்வளவுதான்.

''இந்தா இதுல போடு.''

''என்ன போட?''

''ஏதாவது போடுய்யா.''

அடுத்தவர் முன்னால் எனக்குப் படம் போட்டுப் பழக்கம் இல்லை. நான் இதைச் சொல்லியிருக்கலாம். இல்லையெனில் தெரி யாது என்று ஆரம்பத்திலேயே மறுத்திருக்க லாம். எதையும் சொல்லாமல் பேனாவைத் திறந்து கொண்டேன். எந்த ஓவியத்தையும் பேனாவில் தொடங்கியதில்லை. முதலில் ஒரு கிரீடம். பிறகு இரண்டு யானைக்காதுகள் அதற்குக் கீழாக ஒரு கேள்விக் குறியைக் கவிழ்த்துப் போட்டுத் துதிக்கை.

ஆமாம். பிள்ளையார் படம் வரைந்தேன்.

இந்த நேரத்தில் எனக்கு அது வெட்கக் கேடான விஷயமாக இருக்கிறது. உடம்பு முழுவதும் குறுகிப் போகிறது. திடீரென்று ஆடையற்றுப் போனது போல் அவமான மாக இருக்கிறது.

ஒரு பெண், சக மாணவி, என் திறமை மேல் மதிப்புவைத்துச் சிபாரிசு செய்கிறாள். அவள் முன்னால் இப்படிக் கிறுக்குத்தனம் செய்தது...

ஒரு பெண்ணை வரைந்திருக்கலாம். அதில் ஜெ... செய்வது போல சின்னஞ்சிறு மார்பைக் குமிழ்விடச் செய்திருக்கலாம். அது போனால் போகிறது, படத்திலிருந்த காந்தியை வரைந்திருக்கலாம், எதிரிலிருக் கும் இந்திரா... வராந்தா சுவரில் மாட்டி யிருக்கும் புலவர் கோவிந்தன் யாரையாவது வரைந்திருக்கலாம். ஆனால் போயும், போயும்... அவள் யார் யாரிடம் சொல்லிச் சிரித்தாளோ இல்லையெனில் இவனைப்போய்ச் சிபாரிசு செய்தோமே என வருத்தப்பட் டிருப்பாள்.

ஆனாலும் நான் அவளுக்கு அந்த நேரத் தில் நன்றி சொல்லியிருக்கவேண்டும்.

எனக்கும் பொருளாதாரப் பேராசிரியருக் கும் சம்பந்தமே இல்லை. எனது முதன்மைப் பாடம் கணிதம். ஆனால் அவளுக்குத் தெரிந் தவர். எல்லாப் போட்டியிலும் கலந்து கொள்வாள். அந்தக் கல்லூரியில் நான் வரையக் கூடியவன் என்பது எனது நண்பர் களுக்கு மட்டுமே தெரியும். அதுவும்கூட நான் வரைந்த படங்களைப் பார்த்த பிறகு தான் நம்பினார்கள்.

அன்று ஒரு நன்றிகூட சொல்லவில்லை...

இன்று எனக்குப் பின்னால் மின்சார ரயிலில் நான்கு இருக்கைகள் தள்ளி அவள் உட்கார்ந்திருக்கிறாள். படித்து முடித்து மூன்று வருடம் ஆகிவிட்டது.

---

நான் வேலையில்லாதவனாக இருக்கிறேன். அவள் தபால் ஆபீஸில் வேலை செய்கிறாள்.

அவள் என்னைக் கவனிக்கவில்லை. நானும் என் முகத்தை அவள் கவனிக்க முடியாதபடி வெளியில் வேடிக்கை பார்க்கிறேன்: ஏன் அப்படிச் செய்கிறேன். எனக்கே தெரியவில்லை. 'நீங்கள் எங்கே போகிறீர்கள்' என்ற அனாவசிய கேள்விக்காக விலகியோடுகிறேனா? அப்படிச் சொல்ல முடியாது. ஓவியன் என்று சிபாரிசு செய்த நிகழ்ச்சி என்னை வெட்கப் படுத்திப் பேச விடாமல் தடுக்கிறதா? எதுவுமே இல்லை.

அவள் வேலையில் இருக்கிறாள்.

இவளிடமிருந்து மட்டுமல்ல, என்னோடு படித்த ஆண், பெண் அனைவரிடமிருந்தும் விலகியோடுகிறேன். அவர்கள் கேட்கப் போவது எனக்குத் தெரியும்.

''நீங்கள் என்ன செய்கிறீர்கள்?''

வண்டி நகர்கிறது. அவள் அடுத்த ஸ்டேஷனில் இறங்கி விடுவாள். அது வரையில் அவள் பார்த்துவிடக்கூடாது. அதனால் பலவந்தமாக வேடிக்கை பார்க்கிறேன். இதேபோல் எனது கல்லூரி ஆசிரியர்கள் வந்து விட்டாலும் என்னைக் குறுக்கிக் கொண்டு வேடிக்கை பார்க்கிறேன். படிக்கின்ற காலத்தில் இந்த வேடிக்கை பார்ப்பது எனதுமனத்தில் ஆயிரம் கவிதைகள் கொடுத்திருக்கிறது. இப்போதும் வேடிக்கை பார்க்கிறேன். இதுவும் கவிதையை தருகிறது. அட எதுதான் கவிதையைத் தருவதில்லை. எல்லாமும் கவிதைதான். இந்த. இப்போதைய 'வேடிக்கை' கவிதை என்னோடு முடியட்டும்.

அஞ்சலி

# அன்னையின் ஆணை



○ சுப்பிரமணிய சிவா

ஆங்கிலேயருக்கு எதிராகக் 'கப்பலோட்டிய தமிழன்' வ. உ. சிதம்பரம் பிள்ளைக்கு உறுதுணையாக இருந்து 'பிள்ளைவா'ளுடன் தானும் சிறை சென்றவர் சிவம்! இவருடைய மனைவி, மீனாக்ஷி அம்மாள் தனது 8வது வயதிலேயே சுப்பிரமணிய சிவாவை மணந்தார். புத்தி தெரிந்த காலங்களில் கணவருடன் இன்பமாக வாழலாமென்றால் அந்த சமயங்களில் தான் சிவாவிற்கு சிறை தண்டனைமேல் சிறை தண்டனை! அடுத்து அவரது உடலில் தொழுநோய்! சிவாவின் உடம்பிலுள்ள தீராத வியாதியின் காரணமாக, சிறையிலிருந்து வெளிவந்ததும், அவர் சென்னை மைலாப்பூரில் ஸ்ரீ கபாலீஸ்வரர் கோவிலுக்கருகிலுள்ள, பிச்சுப்பிள்ளை தெரு, 12, நெம்பர் வீட்டில் மனைவியுடன் வாழ்ந்து வந்தார்.

சிறையிலிருந்து விடுதலையானாலும் சிவாவின் நடவடிக்கைகளைக் கவனிக்க அப்போதும் போலீஸ் காவலுண்டு. உடம்பில் வியாதி இருந்தாலும் சிவாவிற்கு மனத்தில் தீவிர வலிமையிருந்தது. ஆங்கிலேய ஆட்சியைக் கண்டித்து, தனது கருத்துக்களை வெளியிட சிவம் 1913 எப்ரல் தமிழ் வருஷப் பிறப்பன்று 'ஞான பானு' என்ற மாதாந்திர பத்திரிகையைத் தொடங்கினார். புதுவையிலிருந்து கவி பாரதியாரும் 'ஞானபானு'வில் தமது சொந்தப் பெயரில் எழுதாமல் 'சாவித்திரி என்ற திருபநேயர்', 'சரஸ்வதி'; 'நித்யதீரர்'; 'ஓர் உத்தம தேசாபிமானி', என்ற வேறு பெயர்களில் கவிதைகள், கட்டுரைகள், வேடிக்கைக் கதைகள் எழுதினார். ஆனால் சிவமோ தனது சொந்தப் பெயரிலேயே நாட்டு மக்களுக்கு அறியாமையை அகற்றவும் ஆட்சியாளர்களை விரட்டவும் கட்டுரைகளை மிக்க துணிச்சலோடு எழுதினார்.

'ஞானபானு' பத்திரிகையின் முதலாளி, ஆசிரியர், குமாஸ்தா எல்லா வேலைகளையுமே சிவமே கவனித்தார். ஆனால் அவருடைய மனைவி மீனாக்ஷி அம்மாள் ஆபீஸ் நிர்வாகத்தைக் கவனித்து வந்தார். ஆபீசும், வீடும் ஒரே இடம்தான்! மிகவும் நெருக்கமான இடம். 'ஞானபானு'வுக்கு வரும் தபால்களைப் பிரித்துப் படிப்பது மனைவி மீனாக்ஷியின் வேலை. இதற்குப் பதிலை வாயால் சொல்வது சிவாவின் வேலை. கணவர் கூறும் பதில்களை நினைவில் வைத்துக் கொண்டு வந்த கடிதங்களுக்கு முறையாகப் பதில்கள் எழுதுவது மீனாக்ஷி அம்மாள்தான்.

'ஞானபானு' ஆரம்பித்து ஓராண்டிற்குள் அச்சுக்கூலி கடன், சந்தாதாரருக்குத் தபால் மூலம் பத்திரிகைகள் அனுப்ப தபால் பில்லைகள் வாங்க முடியாத கஷ்டம்! இதனால் பத்திரிகையில் தாமதம். இவ்வளவையும் மீனாக்ஷி அம்மாள் தான் போட்டிருந்த சங்கிலியை விற்று எல்லாக் கடன்களையும் சமாளித்துப் பத்திரிகையைத் திறமையுடன் நடத்தி வந்தார்.

அடிக்கடி சிவம் சுதேசிய பிரச்சாரத்திற்காக வெளியூர்களுக்குச் சென்று விடுவார். இவருடைய பிரசங்கங்கள் 'ஞானபானு'வில் வெளியானதும் அரசாங்கத்தின் கெடுபிடிகள் வேறு! எதற்கும் அஞ்சாமல் மீனாக்ஷி அம்மாள் பத்திரிகையை நிர்வகித்து வந்தார். சென்னையில் சிவாவின் நண்பர்கள் அவரிடமே, ''சுவாமிக்கு ஏனிந்த கஷ்டங்கள்?'' எனக் கேட்டால், உடனே அவர், ''கஷ்டமா? இல்லையே!... இது எனது அன்னையின் ஆணை!'' என்று இறுமாப்புடன் கூறுவார்.

இந்த சமயம் பார்த்து அவரது சகோதரி ஞானம்பாள் தமயன் சிவா வீட்டிற்குப் பிரசவத்திற்காக வந்து விட்டாள். சிவாவும் தனது கஷ்டங்களை வெளிக்காட்டாமல் முகமலர்ச்சியோடு தங்கையை உபசரித்தார். ஒரு நாள் தங்கை ஞானம்பாள், தன் சகோதரன் மனைவி மீனாக்ஷியின் கழுத்தில் தங்கச் சங்கிலி இல்லாமலிருப்பதைக் கண்ட





அறுவை அரை கப்

● ''ஒன்பதாயிரத்து தொள்ளாயிரத்து தொண்ணூத்து அஞ்சு ரூபா எழுபத்தைஞ்சு பைசா வரதட்சிணை தந்து என் பொண்ணுக்குக் கல்யாணம் பண்ணினேன்.''

''மாப்பிள்ளை எங்கே பாட்டால வேலை பார்க்குறார்?''

● ''நேத்து ராத்திரி ஸ்டார்நைட் பார்த்தேன்.''

''எங்கே?''

''எங்க வீட்டு மொட்டை மாடில.''

-எஸ். சந்திரமௌலி

அவள், ''மன்னி! கழுத்தில் போட்டிருந்த சங்கிலி எங்கே?'' என்றதற்கு மீனாக்ஷி அம்மாள், வேறு ஏதோ சமாதானம் கூறுவதைக் கேட்ட ஞானம்பாள் தன் சகோதரனிடம், ''அண்ணா! மன்னி கழுத்தில் போட்டிருந்த சங்கிலி எங்கே?'' என்று கேட்டதற்கு சிவம் தனது வெண்கலக் குரலில் கணீரென்று சிரித்தபடியே, ''ஞானு! உனக்கு இன்னொரு தங்கை இருக்கிறாளே! அவளைத் தெரியுமோ?'' என்றதற்கு, ஞானம்பாள், ''எனக்கு ஏது அண்ணா தங்கை? நான் தானே கடைசிப் பெண்? யாரு அந்தத் தங்கை?'' என்றதும் சிவம் தனது மேஜை மீதிருந்த ''ஞானபானு'' பத்திரிகையை எடுத்துக் காட்டிக் கொண்டே, ''இவள் தான் உன் தங்கை! உன் பெயர் ஞானு! இவள் ஞானபானு!'' இவளுக்கு அழகு பார்க்கவே உன் மன்னி அதற்குப் போட்டிருக்கிறாள். கூடிய சீக்கிரமே அவள் திருப்பித் தந்து விடுவாள்!'' என்றார் தமாஷாக.

இது கேட்டதும் தங்கை ஞானம்பாள் தன் சகோதரனுக்கு ஏற்பட்டுள்ள கொடிய வறுமையைச் சகிக்காதவளாய் மனம் கலங்கி ''அண்ணா! இந்த சமயம் பார்த்து நான் வேறு பிரசவத்திற்காக உங்களிடம் வந்து விட்டேனே! உங்கள் கையிலே பணமில்லையே!'' என்றதும் சிவம் 'வருத்தப்படாதே ஞானு! எல்லாம் இறைவியின் செயல்! நான் அவளையே நம்புகிறவன். என்னை அவள் கைவிட மாட்டாள்!'' என்று சொல்லி முடிப்பதற்குள் 'ஞானபானு' பத்திரிகைக்காக மணியார்டர் வந்தது! அவ்வளவு தான்! வந்த பணத்தில் பத்திரிகையின் அச்சுக்கூலி, தபால் கட்டணம், கடன், குடும்பச் செலவு, தங்கைக்காகத் தனியாகச் செலவெனக் குதூகலித்து விட்டார் சிவம். இரண்டே நாளில் வந்த தூற்றைம்பதும் காலி!

சில நாட்களாயின. மறுபடியும் கடன் தொல்லை! அதோடு அரசாங்க கெடுபிடிகள் வேறு! ஆனால் சிவமோ எதையுமே இலட்சியம் செய்யாமல், தான் சேலம் சென்டிரல் ஜெயிலில் எழுதிய 'சச்சிதானந்த சிவம்' நூலைப் படித்துக் கொண்டு கவலையற்று வெளித் திண்ணையில் உட்கார்ந்திருந்தார். ''இன்று சாப்பாட்டிற்கு மணி அரிசி இல்லையே!''யென உள்ளிருந்து மனைவியின் குரல். பதிலுக்கு சிவம் சற்று சிலேடையாக ''மணி வேண்டுமா? அரிசி வேண்டுமா? இரண்டில் எது வேண்டும்?'' என்றதற்கு மீனாக்ஷி, ''இரண்டும் தான் வேண்டும்! வடிக்க அரிசி! அரிசியோடு மற்றவைகள் வாங்க 'மணி' வேண்டுமே!'' என்றதுமே, சிவா, மனைவியின் சாமர்த்தியத்தை மனதிற்குள் மெச்சி, மிக்க பெருமிதத்துடன், ''இரண்டுமே கிடைக்கும்! அன்னை மகாசக்தி தருவாள். கவலை வேண்டாம்!'' என்றார். மனைவி மீனாக்ஷிக்கு அவ்வளவு மனப்பண்பு வர வேண்டுமே? மீண்டும் அவள், ''நாம் பட்டினியாகக் கிடக்கலாம்! தங்கை கர்ப்ப வதியால் பசி தாள முடியாதே!'' என்றதற்கு சிவம், ''திடமாக நம்பு! அன்னை கட்டாயம் தருவாள்! கலங்காதே!'' எனச் சமாதானப்படுத்தினார்.

சிறிது நேரத்திற்குள் மணியார்டருடன் வந்த போஸ்ட்மேன், ''மணியார்டர்! மானேஜர் – ஞானபானு!'' எனச் சொல்லி சிவாவிடம் மணியார்டர் பாரத்தை நீட்டியதும் சிவம், ''போஸ்ட்மேன்! மானேஜர் நானில்லை. அதோடு இங்கே மானேஜருன்னு வேறு யாருமில்லை. என் மனைவி தான் மானேஜர்!'' எனச் சொன்னதும் உள்ளேயிருந்து வந்த மீனாக்ஷி அம்மாளிடம் போஸ்ட்மேன், 'ஞானபானு' பத்திரிகைக்காக ஓராண்டுச் சந்தா தொகை ஒன்னே முக்கால் ரூபாயைக் கொடுத்து விட்டுச் சென்றான். பணத்தைப் பெற்றுக்கொண்ட மனைவியிடம் சிவம், ''பார்த்தாயா! அன்னையின் அருள்! இன்றைய பொழுது நீங்கிற்று! எல்லாம் இறைவியின் செயல்!'' என்றாராம்.

1884 அக்டோபர் 4-ல் பிறந்த தீரர் சுப்பிரமணிய சிவாவிற்கு இது நூறாவது பிறந்த ஆண்டு! ஜூலை 23-ல் அவர் காலமான 60-வது ஆண்டு! நினைவு கூர்ந்து அஞ்சலி செலுத்துவோமாக!

(ஆதாரம்: வ. வே. சு. ஐயர் நடத்திய 'தேசபக்தன்' பத்திரிகையில் பணியாற்றிய எஸ். நடேசய்யர், 'சுதேசமித்திரன்' பத்திரிகையில் நீண்ட காலமாக உதவி ஆசிரியராகப் பணியாற்றி சமீபத்தில் காலமானவர். இவர் கவி பாரதியார், சிவம், திரு.வி.க., மற்றும் பலரிடம் நெருங்கிப் பழகியவர். இவர் கூறிய இதே விஷயம் 1944 ஜ 'ஹனுமான்' பத்திரிகையிலும் வெளியிடப் பட்டுள்ளது.)

-ரகமி

# நான் செத்துப் பிழைச்சவன்டா!

வரகூடார்கலை பாதிநிவாசன்

**ஒரு கோர விபத்தில் உடைமைகளையும் மனைவியையும் இழந்து, இடுப்பு எலும்பு முறிந்து, உயிர் பிழைத்தவர் பேசுகிறார்:**

*31.8.81* அன்று மாலை 6 மணி இருக்கும். டில்லி நோக்கிச் சென்று கொண்டிருந்த தமிழ்நாடு எக்ஸ்பிரஸ் விஜயவாடாவுக்கும், காஜி பெட்டுக்கும் நடுவில் பயங்கர விபத்தில் சிக்கியது. நாங்கள் பிரயாணம் செய்த பெட்டி நசுங்கி, நொறுங்கி, தடம் புரண்டு, உருண்டது. என் மனைவி ஸ்தலத்திலேயே உயிரிழந்தாள். நான் இரும்புப் பட்டங்களால் கருட்டப்பட்டுத் தலைகீழாக தொங்கிக்கொண்டிருந்தேன். அதிலிருந்து விடுபட வழியில்லை. எதிர்ப் பக்கத்தில் படுத்திருந்தவரின் உயிரற்ற உடல் ரத்தம் பீறிட்டுக் கொண்டு என் மேல் சரிந்து நசுக்கிக் கொண்டிருந்தது. சுமார் மூன்று மணி நேரம் எனக்கு இந்நிலை. உதவிக்காக கத்தி, அலறி நாக்கு வறண்டு தொண்டை காய்ந்து என் சத்தமும் ஓயும் நிலை. உயிர்ப் பிழைக்கும் நம்பிக்கையை இழந்து கொண்டு இருந்தாலும், உதவி செய்ய யாராவது வந்தால் எனக்கு உயிர் இருப்பது அவர்களுக்குத் தெரிய வேண்டுமே என்று என் இரு பாதங்களையும் முடிந்தமட்டும் வேகமாக ஆட்டிக் கொண்டிருந்தேன்.

விபத்து நடந்த கொஞ்ச நேரத்தில் அருகிலிருந்த சிர்பூர் காகித ஆலை அதிகாரிகள் விஷயமறிந்து தொழிற்சாலைச் சிப்பந்திகளோடு விரைந்து வந்து பெட்டியில் சிக்குண்டு இருக்கும் பயணிகளைக் காப்பாற்றும் பணியில் ஈடுபட்டனர்.

ஒரே இருட்டு. ரயில் பாதையின் இருபுறங்களும் மேடும் பள்ளமும், முள்ளும் புதரும். தக்க ஆயுதங்கள் இல்லாததால் கல் பாறைகளைத் தூக்கி ரயில்பெட்டிகளை உடைத்து அடிபட்டவர்களை வெளியே கொண்டு வரவேண்டியதாயிற்று. எப்படியோ முடிந்த வரையில் காயமுற்றவர்களை விடுவித்து வெளியில் கொண்டு வந்து கிடத்தினர். அருகாமையில் இருந்த நெடுஞ்சாலை வழியாய் செல்லும் காலி லாரிகளை வழிமறித்துக் காயமுற்றோரைச் சிகிச்சைக்காகக்



காகிதத் தொழிற்சாலை ஆஸ்பத்திரிக்கும், சற்றுத்தொலைவிலிருக்கும் மேலம்புள்ளி மருத்துவமனைக்கும் அனுப்பி கொண்டிருந்தனர்.

உடைக்கும் சத்தமும், பேச்சுக் குரலும் கேட்டு நம்பிக்கை வலுத்து, ''நான் உயிருடனிருக்கிறேன். என்னைக் காப்பாற்றுங்கள்'' என்று நான் என் சக்தியையெல்லாம் திரட்டிக் கத்தினேன். ''அல்லா பச்சாதே' (அல்லா காப்பாற்றட்டும்.) என்று புலம்பிக் கொண்டே ஒரு முகம்மதியர் பெட்டி மேலிருந்து டார்ச் வெளிச்சத்தில் உள்ளே குனிந்து பார்த்தார். அவரும் அவர் கூட இருந்தவர்களும்சிரமப்பட்டு என்னைச் சூழ்ந்திருந்த இரும்புச் சட்டங்களை நீக்கி என்னைத் தலைகீழாகவே காலைப் பிடித்து மேலே தூக்கிக் கொண்டு வந்து கிடத்தினர்.

காகஸ் நகர் ஆஸ்பத்திரி மிகவும் சிறியது. சிகிச்சைக்குக் கொண்டு வரப்பட்டவர்களின் எண்ணிக்கையோ அதிகம். கட்டிலிலும் தரையிலுமாக எல்லோரையும் கிடத்தி டாக்டர்கள் எல்லோரும் இயன்றதைச் செய்து உடனடியாக உயிரைக் காப்பாற்ற முயன்றனர். தரையெல்லாம் மனித ரத்த வெள்ளம். கைஒடிந்தவர்களும், கால் முறிந்தவர்களும், மண்டை பிளந்தவர்களும்— அந்தக் காட்சியை நினைத்தாலே விவரிக்க முடியாத வேதனை உண்டாகிறது.

அதே தமிழ்நாடு எக்ஸ்பிரஸில் டில்லி சென்று கொண்டிருந்த சென்னை பெரம்பூர் ரயில்வே ஆஸ்பத்திரி இருதய நோய் அறுவை நிபுணர் டாக்டர் செரியன் விபத்து நடந்த இடத்திலும் காகஸ் நகர் ஆஸ்பத்திரியிலும் அன்புப்பணி ஆற்றி அங்கிருந்த சிப்பந்திகளையும் ஊக்குவித்தார். சென்னையைச் சேர்ந்த இரு கல்லூரி மாணவர்களும் தன்னலம் பாராமல் பணியாற்றினர்.

காகஸ் நகர் ஒரு சிறிய நகரம். காகிதத் தொழிற்சாலைக்காக நிர்மாணிக்கப்பட்டது. உப்போடு கற்பூரம் முதல் எல்லாச் சாமான்களும் வெகு தொலைவிலிருந்து தான் அங்கு கொண்டு வர வேண்டும். விபத்து விஷயம் கேட்டு அந்நகர வாசிகள் போர்க்கோலம் பூண்டு வீட்டுக்கு ஒருவருக்குக் குறையாமல் ஆஸ்பத்திரிக்கு வந்து அல்லல் படுவோருக்குப் பணியாற்றினர். முக்கியமாக மாணவ, மாணவியரைச் சொல்ல வேண்டும். மனிதாபிமானம் பிரவகித்தது. இரவெல்லாம் கண் விழித்து அல்லல்படும் அனைவருக்கும் தலைக்கு ஒருவராகக் கவனிப்பு அளித்தார்கள். விபத்தில் சிக்கிய எல்லோருக்கும் உணவு அளிக்க ஏற்பாடு செய்தார்கள்.

பிர்லா நிறுவனமாகிய அந்தக் காகிதத் தொழிற்சாலையின் ஜெனரல்மானேஜர் தாமே நேரில் வந்து தம் சிப்பந்திகளோடு பணியாற்றினார். அடிபட்டவர்களுக்குப் புது ஆடைகள் உடனடியாக ஏற்பாடுசெய்தார். உற்றார் உறவினருக்கு தந்தியனுப்பப் பட்டது.

விபத்து நடந்த மூன்றும் நாள் விபத்துக்குள்ளானவர்களை ஒரு பிரத்தியேக ரயிலில் சென்னைக்கு அனுப்பி வைத்தார்கள். எனக்கும் என் உறவினர்களுக்கும் முதல் வகுப்பில் இடம்தரப்பட்டது. என்னை வழியில் கவனித்துக் கொள்ள ஒரு டாக்டரும் தக்க ஏற்பாடுகளோடு உடன் வந்தார்.

சென்னை சென்ட்ரல் ஸ்டேஷனிலிருந்து எல்லா வசதிகளும் உடைய ஆம்புலன்ஸில் எக்மோருக்குக் கூட்டிச் சென்று அங்கு வைகை எக்ஸ்பிரஸில் திருச்சி செல்ல ஏற்பாடு செய்தார்கள். என் மனைவியின் சடலப் பெட்டியும் அந்த ரயிலிலேயே வந்தது. திருச்சியில் பொன்மலை ரயில்வே ஆஸ்பத்திரி மெடிகல் சூப்பிரென்டெண்டும் மற்ற ரயில்வே அதிகாரிகளும் பிளாட்பாரத்திலேயே காத்திருந்தனர்.

என் மனைவியின் உடலைத் தகனம் செய்ய ரயில்வே அதிகாரிகள் ஆவன செய்தனர். என் இல்லாளுக்கு நெருப்பிடுவதைப் படுத்த வண்ணமே ஆம்புலன்ஸிலிருந்து கண்ணுற்றுக் கண்ணீர் வடித்தேன்.

பிறகு என்னை ஆம்புலன்ஸில் திருவெறும்பூர் BHEL மருத்துவமனைக்கு அழைத்துச் சென்று வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து சேர்த்து இரவு 12மணியளவில் திரும்பினர் சூப்பரின்டெண்டெண்ட். அடிக்கடி என் உடல்நிலையைப் பற்றித் தொலைபேசி மூலம் ஆஸ்பத்திரி அதிகாரிகளிடம் அவர் விசாரித்து வந்தார். ஓரிருமுறை நேரிலும் வந்து பார்த்தார்.

மனிதாபிமானமும் சேவை மனப்பான்மையும் இன்னும் அடியோடு அழிந்து விடவில்லை என்று எண்ணி எண்ணி என்னைத் தேற்றிக் கொள்கிறேன்.

# அமைதிக்குத் திரும்பும் அமுதத் தடாக

◎ அமைதிக்குத் திரும்பும் அமிர்தசரஸ் கோவில்.

◎ ஆலயத்தையும் மாநிலத்தையும் 'விடுவித்த' ராணுவ தளபதிகள்.



● அம்ருத சரஸ் (அமுத தடாகம்) வன்முறைகளின் எல்லைகளைக் கண்ட பிறகு மறுபடியும் அதன் இயல்பான அமைதியான சூழ்நிலைக்குத் திரும்புகிறது. ஜூன் 2 வரை வன்முறையாளரின் பிடியில் இருந்த தங்கக் கோவில் மறுநாள் அதிகாலையில் இந்திய ராணுவத்தின் துணையுடன் அவர்களின் பிடியிலிருந்து விடுவிக்கப்பட்டது. புனிதக் கோயிலுக்கு மிகக் குறைந்த அளவு சேதத்துடன் இதனைச் சாதித்து முடிக்க எத்தனையோ வீரர்கள் தமது நல்லுயிரைச் சமர்ப்பிக்க வேண்டியிருந்தது. புனிதத் தொழுகை இடம் வன்முறையாளர்களின் தொடர்ந்த வன்செயல்களால் கறை படிந்திருந்தது. புனிதம் காக்கும் ராணுவ வீரர்கள் தம் ரத்தம் சிந்தி, துடைக்கும் வரை.

● அமிர்தசரசும் அதனை ஒட்டிய கிராமங்களும் எப்படி இருக்கின்றன என்று பார்த்து வரச் சென்ற தில்லி அன்பர் கூறுகிறார்:

ஊர் அமைதியாக இருக்கிறது. முன்பு இருந்ததோ அச்சமிக்க அமைதி. இப்போது இருப்பது இயல்பான அமைதி. ஆங்காங்கே வயல்களில் பெண்கள் நடவு நடுகிறார்கள், பாடிக் கொண்டிருக்கிறார்கள். ஒரு தக்காளிப் பண்ணையில் பீகார் மாநில வேலையாட்கள் கூடை கூடையாக டிரக்கில் தக்காளி ஏற்றுவதைப் பார்க்கிறோம். அமிர்தசரசுக்கு வடக்கே எட்டு கிலோ மீட்டர் தூரத்தில் இருக்கிறது நௌஷரா கிராமம். இங்கே ஒரு ராணுவ அதிகாரி பண்ணைக்குச் சொந்தக்காரரிடம் போய், தமது படைக்குத் தேவையான தக்காளியை விலைக்குத் தரும்படி கேட்டார். ''ஐயோ, விலைக்கா? தர முடியாது. இனமாகத்தான் தருவேன்''

○ ராணுவப்பணி முடிந்தது. ஆலயப்பொருள்கள் பத்திரமாக உள்ளன என்று பொறுப்பான மதத்தலைவர்கள் எழுதிக் கொடுத்துள்ள பத்திரம்.

Giani Kirpal Singh
Giani Sahib Singh
Giani Puran Singh
S. Bhan Singh
S. Avtar Singh
S. Ranjit Singh

○ ஆயுதம் ஆயுதம் ஆயுதம். தடாகத்துக்குள் மூழ்கி எடுத்தவை. இதிலே சீனத் தயாரிப்பும் உண்டு.



○ ஆலய பிரசாதம் அல்ல, ஆயிரக்கணக்காகப் பதுக்கி வைக்கப்பட்ட வெடிகுண்டுகள் (கிரேநேட்).



○ இதுதான் தங்கக்கோவிலின் ''மூலஸ்தானம்'' கிரந்த ஸாஹிப் என்ற புனித நூல் போற்றி ஓதப்படும் கூடம். பிரதமர் இந்திராகாந்தி குர்பானி இசை கேட்கிறார் (1984, ஜூன் 23).



என்றார் பண்ணைக்கார சர்தார். ''இரு மாகவா அப்படியானால் எனக்கு வேண் டாம்'' என்றார் ராணுவ அதிகாரி. விஷயம் என்னவென்றால் பண்ணை விளைச்சல் அத்தனையும் காண்டிராக்டாக விற்பனை ஆவதால் சில்லறை விற்பனை இல்லை என்று கூறி இருக்கிறார் பண்ணைக்காரர். இருவரும் எப்படியோ ஒரு முடிவுக்கு வந்து அன்று ஜவான்களுக்குத் தக்காளி கிடைத்தது.

● இரண்டு மூன்று கிராமங்களுக்கு நடுவே வயல்வெளியில் முகாம் இடுகிறார்கள் ராணுவத்தினர். கிராமத்துப் பொறுப்பான பெரியவர்களை அழைத்து, விவரமாகப் பேசுகிறார்கள் ராணுவ அதிகாரிகள். ஏதோ எதிரி நாட்டில் போய் அமர்ந்து விடவில்லையே. நம் நாட்டின் ஒரு பகுதியில் உள்ள ஒரு பிரிவினரில் ஒரு உட்பிரிவுக் காரர்களால் எழுந்த பயமும் பீதியும் போக ராணுவம் முயற்சி செய்கிறது. வன்முறையாளர் யார் எவர் என்று தெரிந்து பிடிபடுகின்றனர். கிராம மக்கள் அச்சம் நீங்கி அமைதிபெற்று பயமற்று நடமாடுவது நன்றாகத் தெரிகிறது. சில வாரங்களுக்கு முன்பு இருந்த நிலையுடன் ஒப்பிட்டுப் பார்த்தால் ஏதோ அதிசயம் போல இருக்கிறது.

● தங்கக்கோவில் உள்ளே ராணுவம் புகுந்து வன்முறையாளரை வெளியேற்றியது முதல் நடவடிக்கை. கிராமம் கிராமமாகச் சென்று களை எடுப்பது நடவடிக்கையின் இரண்டாவது பகுதி.

● பேச்சுக் கொடுக்கும்போது ஒன்று தெளிவாகிறது. ''சீக்கியர் அனைவருக்குமே தங்கக் கோவிலுக்குள் ராணுவம் நுழைந்தது துளிக்கூடப் பிடிக்கவில்லை. அதனால், வெகு ஆத்திரமாகத்தான் இருந்தார்கள், ஜூன் முதல் வாரத்தில். ஆனால் கோவிலுக்குள்ளே வன்முறையாளர் குவித்திருந்த ஆயுதங்களையும் பிற விவரங்களையும் பற்றித் தெரியத் தெரிய, சாதாரண சீக்கியமக்கள் ராணுவ நடவடிக்கையின் அவசியத்தை உணர்ந்து கொண்டு வருகிறார்கள். இந்தத் தவிர்க்க முடியாத நடவடிக்கையைப் பற்றியும் கோவிலைக் காக்கும் முயற்சியில் பலநூறு ஜவான்கள் உயிர் இழந்தது பற்றியும் தெரியத் தெரிய இராணுவ நடவடிக்கையால் பொங்கிய முதல் கோபமும் தணிந்து வருகிறது.'' —இப்படிச் சொல்கிறார் டாக்டர் ஹர்ஜித் என்னும் ஒரு வைத்தியர்.

● வழியெங்கும் சந்திக்கும் சாதாரண மக்கள் பலவிதங்களில் தெரிவிக்கும் செய்தி ஒன்றே: ''இத்தனை நாள் வேலையும் இல்லை. கூலியும் இல்லை. இனி பரவாயில்லை.''

● பண்ணைக் கூலிகள் பெரும்பாலும் வெளி மாநிலத்துக்காரர்கள். பஞ்சாபிய கிராமத்து வீடுகளில் கூட ட. வி. ஆண்டினாக்கள் புதர் புதராக மண்டியிருக்கின்றன. வீட்டின் உள்ளே கலர் ட. வி. இருந்தாலும் வியப்பில்லை.

● ஜீப்பில் போகும் வழியில் திடீரென்று தமிழ்நாட்டுக் கிராமம் ஒன்றுக்குள் புகுந்து விட்டது போலத் தோன்றுகிறது. சிறு வீடுகள், மரடித்தடியில் கூடிப்பேசும் சில பெண்டிர், வயல் ஓரத்தில் எளிய மக்கள், வீதியில் விளையாடும் குழந்தைகள். தாடிக்காரர் நிறைய இருப்பதால்தான் இந்த 'நவான் பிண்ட்' ஒரு பஞ்சாபிய கிராமம் என்று நினைவு வருகிறது.

● ஒரு பாசனக் கால்வாயில் நீர் தாராளமாக ஓடிக் கொண்டிருக்கிறது. சின்னஞ்சிறு குழந்தைகள் — சீக்கியரும் ஹிந்துக்களும் — சேர்ந்து நீச்சல் அடிக்கிறார்கள். நாளைய தலைமுறையின் இந்த ஒற்றுமை ஒரு நல்ல சகுனமாகப் படுகிறது

—தகவல், பேட்டி: டி. எஸ். வி.

---



தனித்தன்மை பெற்றிருப்பதாலும், அஃதில்லாமல் மற்ற விரல்களின் இயக்கங்கள் ஸ்தம்பித்து விடும் என்பதாலும் கட்டைவிரல் — பரமனைக் குறிக்கிறது.

சுட்டிக் காண்பிப்பதின் மூலம் மனித தாத்பர்யத்தை உணர்த்துவதனால், சுட்டு விரல் — ஜீவனைக் குறிக்கிறது.

மோதிரம் அணிவிக்கப்படுவதற்காகப் பிரத்தியேகமாக உள்ள மோதிர விரல் — பொன்னைக் குறிக்கிறது.

பாம்பைக் குறித்து, பாம்பு உறையும் இடத்தை உணர்த்தும், பாம்பு விரல் — மண்ணைக் குறிக்கிறது.

நளினமானதாலும் மென்மையானதாலும் கடைசியான சிறிய விரல் — பெண்ணைக் குறிக்கிறது.

'அதாவது சுட்டுவிரல், கட்டைவிரலைத் தவிர மற்ற மூன்று விரல்களுடன் இணைந்து அமைந்திருப்பது போல், ஜீவாத்மா எப்போதும் மண், பெண், பொன் ஆகியவற்றில் அமிழ்ந்து உழன்று கொண்டிருக்கிறது. அப்பேர்ப்பட்ட ஜீவாத்மா, பரமாத்மாவை அடைய வேண்டுமானால் அம்மூன்றையும் விலக்க வேண்டும். பிறகு தான் பரமனையடைவது சாத்தியம்' என்கிற அரிய தத்துவத்தை உணர்த்துகிறது இந்த முத்திரை.

—ஒரு சொற்பொழிவில் கூறக் கேட்டவர், —'ஆர். ஸ்ரீதர்.'





வாய் துர்நாற்றத்தை தடுத்திடுவீர்...
பற்சிதைவை எதிர்த்திடுவீர்




கோல்கேட்டின் நம்பகமான ஃபார்முலா, சிறப்புடன் செயல்பட்டு நீங்கள் பல்துலக்கும் ஒவ்வொரு முறையும் உங்களுக்கு புத்துணர்ச்சிதரும் தூய சுவாசம் அளிக்கின்றது. பற்களுக்கு ஆரோக்கியமும், உறுதியும் தருகிறது.

எப்படி என்றால்...



உணவுத் துணுக்குகள் பற்களுக்கிடையே சிக்கிக் கொள்வதால் துர் நாற்றத்தையும் பற்சிதைவையும் உண்டாக்கும் பாக்டீரியாக்கள் வளருகின்றன.



கோல்கேட்டின் ஒப்பற்ற செயல்புரியும் நுரை ஆழ ஊடுருவிச்சென்று உபாதை தரும் உணவுத் துணுக்குகளையும் பாக்டீரியாக்களையும் அகற்றி விடுகிறது.



பயன்: தன்னம்பிக்கை தரும் இனிய சுவாசம், பற்சிதைவுக்கு எதிராகப் பாதுகாப்பு, உறுதிமிக்க ஆரோக்கியமான பற்கள்.

ஆகவே, சாப்பிட்டு முடிந்தவுடனேயே மறக்காமல் கோல்கேட் டென்டல் க்ரீம் உபயோகித்து பிரஷ் செய்யுங்கள்.

**கோல்கேட்டின் புத்துணர்ச்சி தரும்
பெப்பர்மென்ட் சுவை உங்களுக்கு விருப்பமானது!**



**அத்தியாயம் 14**

தேர்தல் தோல்விக்குப் பின் கணக்கு வழக்குகளைத் தீர்க்கவும் எலெக்ஷன் வேலையாக அலைந்த வாடகைக் கார்கள் முதலியவற்றுக்குப் பணம் கொடுத்துக் கணக்குத் தீர்க்கவும் சில நாட்கள் தொடர்ந்து அவன் எழிலிருப்பில் தங்கியாக வேண்டியிருந்தது. போஸ்டர்கள், துண்டுப் பிரசுரங்கள், தேர்தல் ஸ்லிப்புகள் அச்சிட்ட வகையில் நிறையப் பணம் தர வேண்டியிருந்தது. ஒலிபெருக்கி மேடை ஏற்பாடுகள், ஊழியர்களுக்குச் சாப்பாடு, சிற்றுண்டி வாங்கிய ஓட்டல் கணக்கு எல்லாம் நிறைய பாக்கியிருந்தன. கன்னையாவையும் சர்மாவையும் உடன் வைத்துக் கொண்டு அவற்றை எல்லாம் சரிபார்த்துப் பட்டுவாடா செய்ய வேண்டியிருந்தது. ஒவ்வொன்றாகச் செய்தான்.

ஊருக்குப் புறப்படுமுன் கடைசியாக ஒரு நைப்பாசை திருமலையின் மனத்தில் எழுந்தது. சண்பகமோ போய்ச் சேர்ந்து விட்டாள். இனியும் மகனை அவனுடைய மாமனாகிய சண்பகத்தின் தம்பியிடம் வளர விட வேண்டிய அவசியமென்ன? மகனைச் சென்னைக்கு அழைத்துச் சென்று டான்பாஸ்கோவிலோ, வேறு கான்வெண்டிலோ சேர்த்துப் படிக்க வைக்கலாமா என்று தோன்றியது. ஒரு நந்தவனத்துப் பண்டாரத்தோடு தன் மகன் வளர வேண்டாமென்று எண்ணினான் இரு. தானே போய்க் கூப்பிட்டால் நடக்காதென்று தெரிந்தது. சர்மா தான் இதைப் பேசி முடிவு செய்யச் சரியான ஆள் என்று அவரைக் கூப்பிட்டு எல்லா விவரமும் சொல்லி நந்தவனத்துக்கு அனுப்பினான். சர்மாவுக்கு இது சரிவரும் என்று படவில்லை. தயக்கத்தோடு தான் நந்தவனத்துக்குப் புறப்பட்டுப் போனார் அவர். திருமலையின் விருப்பத்தைத் தட்டிச் சொ.ல்ல முடியாமல் தான் அவர் போக வேண்டியிருந்தது. சண்பகத்தின் தம்பி முகத்திலடித்தாற் போல் உடனே மறுத்துச் சொல்லி விட்டான். ''சாமீ! எல்லாம் படிச்ச நாலும் தெரிஞ்ச நீங்க இந்தக் கிராதகனுக்காக இப்பிடித் தூது வரலாமா? பையனை இவங்கூட அனுப்பினா அவன் படிச்சு உருப்பட முடியுமா? மூணு நாலு சம்சாரம், ஏழெட்டுத் தொடுப்பு, இதோட குடி, சினிமா சகவாசம் இத்தனையும் இருக்கற எடத்துலெ பையன் ஒழுங்காக எப்பிடிப் படிச்சு வளர முடியும்? நாலு காசுக்கு ஆசைப்பட்டு உங்களைப் போலப் பெரியவுக

இந்த மாதிரி விடலைப் பசங்களோட சுத்தறதே எனக்குப் பிடிக்கலே'' —

''என்னப்பா பண்றது? வயித்துப்பாடுன்னு ஒண்ணு இருக்கே? காலட்சேபம் எப்பிடியாவது நடந்தாகணுமே?'' என்றார் சர்மா.

''பிச்சை எடுத்தாவது என் மருமகனை ஒழுக்கமாக வளர்த்துப் படிக்க வைப்பேன்னு சொல்லுங்க'' — என்று கறாராகச் சொல்லி விட்டான் சண்பகத்தின் தம்பி. சர்மா திரும்பி வந்து திருமலையிடம் விவரங்களைச் சொன்னார். சண்பகத்தின் தம்பி உட்பட யாரும் தன்னை ஒரு குடும்பப் பாங்கான மனிதனாக ஒப்புக் கொள்ளவில்லை என்பது திருமலைக்குப் புரிந்தது. தேர்தல் தோல்வியைத் தவிர இது இன்னொரு தோல்வியாக அமைந்தது அவனுக்கு. பையனை அவன் மாமனிடம் இருந்து பிரித்து அழைத்துச் செல்லுவதற்குக் கோர்ட் சட்டம் ஆகியவற்றின் துணையை நாட விரும்பவில்லை அவன். தன்னிடம் வளர்வதை விட நந்தவனத்துக் குடிசையில் அவன் இன்னும் யோக்கியனாக வளர முடியும் என்ற நம்பிக்கை உள்ளூறத் திருமலைக்கும் இருந்தது.

தேர்தலில் நிறையப் பணம் செலவாகி விட்டது. மறுபடி சென்னை திரும்பியதும் மற்றவர்கள் படங்களுக்குக் கதை வசனம், பாடல் எழுதுவதைத் தவிர வட்டிக்குக் கடன் வாங்கித் தானே ஒரு படம் எடுத்து விற்றால் கொஞ்சம் அதிகம் சம்பாதிக்கலாம் என்று தோன்றியது. தொழிலில் அவனுக்கு இருந்த செல்வாக்கால் யாரும் கடன் கொடுக்கத் தயாராயிருந்தார்கள். பணத்தைக் கடன் வாங்கிப் படம் எடுக்கத் தொடங்கினான். அதேசமயம் திராவிட முழக்கம் 'அதிரடி' பகுதியில் தன் தோல்வியைப்பற்றியும், எழிலிருப்பு ஜமீன்தார் பணத்தைத் தண்ணீராக வாரி இறைத்து வென்றுவிட்டார் என்றும் தொடர்ந்து எழுதி வந்தான். உண்மையில் ஜமீன்தார் தன்னைவிடக் குறைவான தொகையைச் செலவழித்துத் தான் வெற்றி பெற்றார் என்பது அவனுக்குத் தெரிந்திருந்தது. என்றாலும் அரசியலில் நிஜத்தைச் சொல்லிப் பயனில்லை என்று அவன் ஒரு நம்பிக்கையோடு தொடர்ந்து பொய்களைச் சொல்லி வந்தான். தன் எதிரி உண்மையிலேயே நல்லவனாயிருந்தாலும்கூட அவன் நல்லவனில்லை என்று மக்களுக்குச் சித்தரித்துக் காட்டுவதில் எவன் முழுமையாக வெற்றி பெறுகிறானோ அவன்தான் முழுமையான அரசியல்வாதி என்று நம்பினான் திருமலை. மக்களை மூட நம்பிக்கையால் ஏமாற்றி சாமி படத்தில் கையடித்து வாங்கிப் பணம் கொடுத்து ஓட்டுச் சேகரித்தே ஜமீன்தார் வெற்றி பெற்றார் என்று இடைவிடாமல் எழுதி வந்தான் அவன். சிலர் அதை நம்பி அதுதான் உண்மையோ என்று மருளவும் ஆரம்பித்தனர். தேர்தலில் தான் தோல்வியே ஒழியத் திரை உலகில் எப்போதும் போல் அவனுக்கு வெற்றிகள் தொடர்ந்தன. சொந்தமாக எடுத்த படம் டிஸ்ட்ரிபி

நா. பார்த்தசாரதி



யூட்டர்களிடம் நல்ல லாபத்துக்கு விலை போயிற்று. அவனே டைரக்டர், தயாரிப்பாளர் என்றெல்லாம் பெயரைப் போட்டுக் கொள்கிற துணிச்சலும், புகழும் வந்து விட்டன. அந்த ஆண்டு அவன் எதிர்பாராத விதமாக ஒரு வழக்கில் சிக்கிக் கொண்டு பெரும் பணமும் கெட்டு நஷ்டப் பட்டுத் திண்டாட நேர்ந்தது. இயக்கத்தில் ஈடுபாடுள்ள ஒரு குடும்பத்தில் திருமணம் ஒன்றிற்குத் தலைமை வகிப்பதற்காக அவன் போயிருந்தான். மணப்பெண் கொள்ளை அழகு. சினிமாவில் கதாநாயகியாக உடனே 'புக் பண்ணி' நடிக்க வைக்கலாம் போல அத்தனைக் கவர்ச்சி அந்தப் பெண்ணுக்கு இருந்தது. மணமகன் வசதியுள்ள குடும்பத்தைச் சேர்ந்தவன். ஆனால் அத்தனை அழகில்லை. சுமார் ரகம் தான். மணமகன் குடும்பம் தான் அவனுக்கு மிகவும் நெருக்கமான இயக்கத் தொடர்புடையது.

அந்த மணப்பெண்ணைப் பார்த்தவுடன் மனத்தில் என்ன தோன்றியதோ அதை அப்படியே மேடையில் பேசி விட்டான் அவன்.

''எங்கள் மணப்பெண் சினிமா நட்சத்திரங்களைப் புறமுதுகிடச் செய்யும் அத்தனைப் பேரழகுடன் விளங்குகிறார். ஆந்திரத்திலிருந்தும், கேரளத்திலிருந்தும், கர்நாடகத்திலிருந்தும் அழகிகளைத் தேடியலையும் திரையுலகம் இந்தப் பெண்ணைப் போன்ற தமிழ் அழகிகளை அடையக் கொடுத்து வைத்திருக்க வேண்டும். இந்தப் பெண் மட்டும் நடிக்க வந்திருப்பாராயின் நானே என்னுடைய தயாரிப்பு ஒன்றிற்கு இவரைக் கதாநாயகியாகவே செய்திருப்பேன். கதாநாயகியாகத் திரை உலகில் நுழைந்திருந்தால் வரலாறு படைத்திருப்பார் இவர்.'' — என்று இப்படித் தொடங்கித் தொடர்ந்தது அவனுடைய தலைமை உரை. மணமகனுக்கும், மணமகன் வீட்டாருக்கும் இது பிடிக்கவில்லை. திருமணத் தலைமையில் 'மணமகள் நல்ல நடிகையாகியிருக்கலாம்' என்பது போன்ற பேச்சு என்னவோ போலிருந்தது. கௌரவமாகவும் இல்லை. தலைமை வகிக்க வந்த மூன்றாம் மனிதன் ஒருவன் மணப்பெண்ணின் அழகை அங்கம் அங்கமாக வர்ணிக்க ஆரம்பித்தது வேறு மணமகனுக்கும், அவனை ஒட்டி வந்திருந்த உறவினர்களுக்கும் எரிச்சலூட்டியது. அவர்களுக்கு இந்தத் தலைமை இதுமாதிரி மேடைப் பேச்சு எதுவுமே பிடிக்கவில்லை. வர்ணனையும், சினிமாவில் நடிக்க வைக்கலாம் என்ற பேச்சும் வரம்பு மீறிப்போகவே பெண் வீட்டாரும் சொல்லவும் முடியாமல், மெல்லவும் முடியாமல் விழித்தனர்.

ஒருவழியாக மணவிழா முடிந்தது. திருமலை சென்னை திரும்பினான். ஒரு வாரம் கழித்து அவன் தன்னுடைய புரொடக்ஷன் அலுவலகத்தில் இருந்த போது யாரோ ஓர் அழகிய இளம்பெண் சூட்கேஸும் கையுமாகத் தேடி வந்திருப்பதாக வாட்ச்மேன் வந்து தெரிவித்தான். உள்ளே வரச்சொன்னால் அவன் தலைமை வகித்து நடத்திய அந்த மணவிழாவின் மணமகள் இரயிலிலிருந்து இறங்கிய கோலத்தில் பெட்டியும் கையுமாக எதிரே வந்து நின்றாள்.

''சார்! உங்களை நம்பித்தான் புறப்பட்டு வந்திருக்கேன். எப்படியாவது என்னை ஹீரோயின் ஆக்கிடுங்க சார்! நான் அந்தக் காட்டானோட குடும்பம் நடத்த முடியாது. அவனுக்கு நான் அழகாயிருக்கிறதே பிடிக்கலே. வாய்க்கு வாய், 'பெரிய ரம்பைன்னு நினைப்பாம'ன்னு குத்திக் காமிச்சிக்கிட்டே இருக்கான். கதாநாயகி மாதிரி அழகாயிருக்கேன்னு என்னைப் பத்திப் புகழ்ந்து பேசினதுக்காக உங்கமேலே அவனுக்குப் படு ஆத்திரம். என்னாலே இனிமே அந்த நரகத்திலே காலந்தள்ள முடியாது! நானே சொல்லாமல் கொள்ளாமல் புறப்பட்டு வந்துட்டேன்'' —

துணிந்து கணவனையே அவன் இவன் என்று ஏகவசனத்தில் திட்டினாள் அவள். அவன் மணவிழாவில் அவளைப் புகழ்ந்த புகழ்ச்சி அவளுக்கு வீட்டை விட்டு ஓடிவருகிற துணிவையே அளித்திருக்கிறதென்று திருமலைக்குப் புரிந்தது. அவள் செயலுக்காக அவளைக் கண்டிக்கவும் முடியாமல், பாராட்டி ஏற்கவும் முடியாமல் திணறினான் அவன். தனது பொறுப்பில்லாத பேச்சு புதியதாகத் தொடங்கிய குடும்ப வாழ்வு ஒன்றையே சீரழித்திருப்பது பற்றி அவன் கவலைப்படவில்லை. தன்னுடைய இணையற்ற சொல்வன்மை தன் காலடியில் ஓர் அழகியைக் கொண்டு வந்து சேர்த்திருப்பதாகவே எண்ணிப் பெருமைப்பட்டான் அவன்.

மெல்ல மெல்ல அவளை வசப்படுத்திப் படத்தில் கதாநாயகியாக்குவதாக உறுதிமொழி கொடுத்து முதலில் தனக்குக் கதாநாயகியாக்கிக் கொண்டு மகிழ்ந்தான் திருமலை. சில நாட்களில் விவரமறிந்த அவள் கணவன் திருமலையின் மேல் கிரிமினல் வழக்குத் தொடர்ந்தான். சினிமாவில் நடிக்கச் சான்ஸ் தருவதாகப் பொய் கூறித் தன் மனைவியைக் கடத்திச் சென்று கெடுத்து விட்டதாகத் திருமலைமேல் குற்றம் சாட்டியிருந்தான். 'அப்டக்ஷன்' (கடத்தல்)

✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦✦

டாக்டர்: ''நேத்து இந்த எக்ஸ்ரேயை நான் பார்த்தப்போ இதிலே எலும்பு முறிவு இல்லே, இப்ப முறிவு. தெரியுதே!''

நர்ஸ்: ''இன்னிக்குக் காலையிலே இதைத் தவறிப்போய் மாடியிலிருந்து கீழே போட்டுட்டேன் டாக்டர்!''

—சி. சகாப்தீன்.



என்று வேறு பழி வந்திருந்தது. இந்த விவகாரம் ஒரு நாலைந்து மாதம் கோர்ட், கேஸ் என்று அவனைச் சீரழித்து விட்டது. கணிசமாகச் செலவும் வைத்து விட்டது. சாதாரண மனிதனாக இருந்து கொண்டு ஒரு பெண்ணைப் புகழ்வது வேறு. சினிமாத் தயாரிப்பாளர் இயக்குநராக இருந்து கொண்டு ஒரு பெண்ணைப் புகழுவது அபாயகரமான காரியம் என்பது இன்று அவனுக்குப் புரிந்தது. இந்த விவகாரம் அவன் பெயரைப் போதுமான அளவு கெடுத்து விட்டது. கொஞ்ச நாளைக்குத் தான். பிறகு மக்களும் இதை எல்லாம் மறந்து விட்டார்கள். அவனும் மறந்து விட்டான். அவனை ஓர் அங்கமாகக் கொண்டிருந்த இயக்கம் இம்மாதிரிச் சறுக்கல்களையும், வழுக்கல்களையும் என்றுமே பொருட்படுத்தியதில்லை. மக்களின் மறதியை நம்பித் தான் பலர் அரசியல் நடத்துகிறார்கள். தேர்தல்களுக்கு நின்றார்கள். வெற்றி பெற்றார்கள். இயக்கங்களை நடத்துகிறார்கள். பேர் புகழ் எல்லாம் பெற்றார்கள். சட்டமன்றத் தேர்தல்களில் தளர்வுற்றிருந்த அவன் கட்சி நகரவை பஞ்சாயத்துத் தேர்தல்களில் முழுமூச்சுடன் இறங்கியது. பொதுவாக நாட்டில் அகவிலைகள் ஏறியிருந்தன. நல்ல அரிசி கிடைக்கவில்லை. ரேஷன் வேறு. அரிசிவிலை பல மடங்கு ஏறியிருந்தது. 'உடையார் அண்ணாச்சி — உளுந்து விலை என்னாச்சு' — என்பது போன்ற கோஷங்களை எதுகை மோனையோடு இயக்கத்துக்கு அவன் எழுதிக் கொடுத்தான். நகரவைத் தேர்தல்கள் நடைபெற்றன. அதிசயப்படத்தக்க அளவில் அவர்கள் வெற்றி இருந்தது. யாருமே எதிர்பார்க்கவில்லை. சென்னை மாநகராட்சியை அவர்கள் பிடித்தார்கள். வேறு பல நகரசபைகள், பஞ்சாயத்துக்களையும் அவர்கள் கைப்பற்றியிருந்தார்கள். மக்கள் தங்கள் பக்கம் திரும்பியிருக்கிறார்கள் என்பதற்கான அடையாளம் வெளிப்படையாகவே தெரியத் தொடங்கியிருந்தது. கையில் பத்திரிகையும், பையில் பண வசதியுமுள்ள அவனுக்கு இயக்கத்தில் எப்போதும் போல் தனிச் செல்வாக்கு இருந்தது. பொதுவாக ஒருவருடைய அறுபதாவது ஆண்டைத் தான் கொண்டாடுவார்கள். திருமலைக்கோ ஐம்பதாண்டு நிறைந்ததையே 'பொது வாழ்வுச் செம்மலுக்குப் பொன் விழா' — என்று கொண்டாடினார்கள். அரைப் பவுனில் ஒரு மோதிரம் — கட்சிச் சின்னத்தோடு பேரறிஞர் பெருந்தகையாக அவன் வணங்கிய இதய தெய்வமான அண்ணனே அவனுக்கு மேடையில் அணிவித்தார். ''சொற்பொழிவுத் தென்றல், என்னருமை இளவல், திரை வசனத் திறனாளர், இயக்கத் தளபதி இன்று பொன் விழாக் காண்கிறார். மணிவிழா நாளைக் காண்பார். பவளவிழாவும் காண்பார்'' — என அண்ணன் பாராட்டுரைகளைப் பகர்ந்து அவனைப் புகழ்ந்தார்.

அவனது பொன் விழாவைக் கட்சி கொண்டாடிய சிறிது காலத்தில் இந்தி மொழியைத் தீவிரமாக எதிர்த்து ஒரு போராட்டம் நடத்துவதென்ற எண்ணம் இயக்கத்தில் தீர்மானம் செய்யப்பட்டிருந்தது. கட்சியை வளர்க்க வேண்டுமானால் நாளடைவில் தனி நாடு கோரிக்கையை மெல்ல மெல்ல விட்டுவிட வேண்டுமென்று சட்ட விவரம் தெரிந்த சிலர் தலைவர்கள் மட்டத்தில் வற்புறுத்தி வந்தனர். டெல்லியில் மாநிலங்களவைக்குப் போய் வந்தபிறகு அண்ணனின் மனப்பான்மையிலும் சில மாறுதல்கள் வந்திருப்பது போல் தோன்றியது. நாட்டுக்கு ஏற்பட்டிருந்த அந்நிய அபாயங்கள் முற்றித் தோன்றிப் பயமுறுத்திய போதெல்லாம் தனி நாடு கோரிக்கை என்ற ஒரே காரணத்தைக் காட்டியே இந்த இயக்கத்தைத் தடை செய்து விடுவார்களோ என்று பயம் நிலவியது.

''மாங்குயில் கூவிடும் பூஞ்சோலை —அது நம்மை
மாட்ட நினைக்கும் சிறைச்சாலை''—என்று வருவதிலுள்ள சிறைச்சாலைகளைப் பலமுறை சந்தித்தவர்களுக்கே 'கட்சியைத் தடை செய்வார்களோ' என்ற எண்ணம் மட்டும் பயத்தை உண்டாக்கியது. மாநகராட்சியைக் கைப்பற்றிய பின் மாநில ஆட்சியையும் கைப்பற்ற முடியும் என்ற நம்பிக்கை எல்லோருக்கும் வந்திருந்தது. அந்தச் சமயத்தில் ஒரு நாள் ஒரு முக்கிய வேலையாகக் கலந்து பேச வேண்டுமென்று அண்ணன் அவனைக் கூப்பிட்டனுப்பினர்.

(தொடரும்

---



**அடுத்த வாரம்:**

**கடவுளையே ஏமாற்றக் கற்றுக்கொண்டான் மனிதன்!**

**கோவில்கள் சொத்து கோடி கோடியாய் அரோகரா!**

**ஓர் அவல நிலையைச் சித்திரிக்கிறது...**

# ஐயோ! பாவம் ஆலயங்கள்!

சிறப்புப் பேட்டி

# மணி மந்தி

(சென்றவாரத் தொடர்ச்சி)

சித்திரத்துக்கு ஆதாரமான துணி கரடு முரடாக இருந்தது. ஒரு துணியின் மேல் ஒரு வகையான மெழுகைத் தடவிப் படமாக்கியிருந்தார்கள். அதன்மேல் சாதாரணமான வண்ணங்களால் சித்திரம் வரையப்பெற்றிருந்தது. கோடுகள் வெகு சுலபமாக வரைந்திருப்பது போலத் தோன்றியது. சில படங்களில் ஒரு முறை வரைந்து, அழித்த அடையாளம் காணப்பட்டது. இன்னும் சிலவற்றில் முதல் தடவை இழுத்த கோடுகளே இருந்தன. மொத்தத்தில் 'சித்திரக்காரரின் கை சுலபமாக ஓடியிருக்க வேண்டும்' என்பதை உணர்த்தி விளப்பூட்டக்கூடிய சிதத்திரங்கள். அவற்றுள் ஒன்று கோபாலகிருஷ்ணனுடைய சித்திரம்.

''எழுதியவனுக்குக் கோபாலகிருஷ்ணன் எவ்வளவு பிரத்தியட்சமாக இருந்திருக்க வேண்டும் என்பதை அந்தப் படத்தைப் பார்த்தவர்கள் தான் ஊகிக்க முடியும். நின்றிருக்கும் எழில், காலை வைத்திருக்கும் பாணி, கைகள் குழலைப் பிடித்திருக்கும் அழகு, குழலோடு இசைந்திருக்கும் உதடுகளின் ஒயில், அந்தப் பார்வையின் ஒய்யாரம், ஒருபுறம் சாய்ந்து நிற்பதால் மார்பின் ஒரு புறமாகச் சாய்ந்திருக்கும் மாலையின் அழகு; இவைகள் எல்லாம் இருக்கட்டும். அந்தக் கானம், சூழ்ந்திருக்கும் காற்றில் பரவியிருப்பதால் மற்ற ஒலிகளெல்லாம் அதில் அடங்கி, நின்றுவிட்டதைக் காண்பிப்பது போன்று, பின்புறத்தில் உள்ள ஒரு மரத்தின் அசையாத இலைகளின் சித்திரத்தையும், மகிழ்ச்சியோடு இசையைக்கேட்டுக் கொண்டு அருகே நின்றிருக்கும் பசுவையும் நெருங்கி நின்றிருக்கும் தேவதைகள், ரிஷிகள், கோபிகாஸ்திரீகள் ஆகிய இவர்களின் சொகுசையும் பாா்க்கும் போது, இந்தக் கடவுள் இவர்களுக்குப் பிரத்யட்சமாகவே இருந்திருக்க வேண்டுமென்று எனக்குத் தோன்றியது. எமிலி, ஃபார்க்கூவர் இவர்களுடைய மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை.

''இதை எழுதியவர் யார்?''

'எங்கள் தாத்தா.'

''மிகவும் கெட்டிக்காரர் என்று தோன்றுகிறது.''

''அவரைப் போன்ற கெட்டிக்காரர்கள் எங்கள் குடும்பத்திலேயே பிறக்கவில்லை.''

''அவர் இன்னும் ஏதாவது வரைந்திருக்கிறாரா?''

'அவர் நிறையச் சித்திரங்களை வரைந்தார். ஆனால் அதில் முக்கால்வாசியும் கோபாலகிருஷ்ணன் சித்திரங்களே ஆகும். அவருக்கு இந்த சுவாமியின் சித்திரத்தை வரைவதில் உற்சாகம் அதிகம். இதோ பாருங்கள்; இவை எல்லாவற்றையும் வரைந்து பழகிய பிறகு கடைசியில் வரைந்த படம் இது' என்று உள்ளே போய் ஒரு காகிதக் கட்டைக் கொண்டு வந்து எதிரே வைத்தார். பிரித்துப் பார்த்தால் முக்கால்வாசியும் கோபாலகிருஷ்ணனுடைய சித்திரங்களாகவே இருந்தன. ஒன்றுக்கும் மற்றொன்றுக்கும் வேற்றுமை கொஞ்சம்தான். எந்தப் பகுதியில் வேற்றுமை என்று சொல்லும்படியாக இல்லை. ஆனால் பொதுவாக வேற்றுமை தென்பட்டது. எல்லாவற்றையும் வரிசையாகப் பார்த்து வந்தோம். பதினாறு படங்கள் கிடைத்தன.

'இவற்றுள், ஒவ்வொன்றையும் வரைவது, வரைந்த பின், ''சுவாமி எனக்குத் தரிசனம் கொடுப்பது இப்படியன்று'' என்று சொல்லி மற்றொன்றைத் தொடங்குவது – இப்படிச் செய்து செய்து, கடைசியில் வந்ததுதான் அப்பொழுது பார்த்தீர்களே அந்தப்படம்' என்றார் அவர்.

''ஃபார்க்கூவர் ஆச்சரியப்பட்டான். 'அப்படியானால் அந்தப் படத்தை வரைந்த போது அது சரியாக வந்து விட்டதாகத் திருப்தி அடைந்தாரா?'''

'இல்லை. அதற்கப்புறம் சில நாட்கள் கழிந்த பின், மற்றொரு படத்தைத் தொடங்கினார். அதில் கைவைக்கும் முன், பத்துப் பன்னி



மாஸ்தி ஸ்ரீநிவாச

ஏண்டு நாட்கள் விடாமல் சுவாமிக்குப்பூஜை செய்து விடியற்காலையிலும் மாலையிலும் தியானத்தில் உட்கார்ந்து விடுவாராம். அவருடைய வாழ்க்கையே விசித்திரம். அன்று தியானத்தில் உட்கார்ந்திருந்தவர், சுயநினைவு பெற்று, 'சுவாமி அருள் செய்து விட்டாற்போல் இருக்கிறது!' என்று மனைவியை அழைத்துச் சுவாமிக்குத் தேங்காய் உடைக்கச் சொல்லி, வரைய உட்கார்ந்தாராம். பிற்பகலில் சூரியன் இரண்டு மார் அளவு இறங்கிய பிறகும் அவர் வரைந்து கொண்டே உடகார்ந்திருந்தார். அந்தச் சமயத்தில் எங்கள் பெரிய தாத்தா பூஜையை முடித்துக் கொண்டு வந்து தம்பியின் அருகே உட்கார்ந்தார். வீட்டில் குழந்தை குட்டிகள் எல்லாம் சாப்பிட்டாயிற்று என் பாட்டி அப்பொழுது என் தந்தையைக் கருவுற்றிருந்தார். 'யாரும் காத்திருக்க வேண்டாம்' என்று சொல்லி எல்லோரையும் சாப்பிடச் செய்தார். எங்கள் பெரிய தாத்தா, சிறிய தாத்தா இருவர் மட்டுமே பசியோடு உட்கார்ந்திருந்தார்கள். 'இதோ முடிந்து விடும்' என்ற வண்ணம் சாயங்காலம் வரை உட்கார்ந்திருந்தார்களாம்; படத்தைப் பார்த்தாலும் அப்படித்தான் தோன்றுகிறது. அப்படி உட்கார்ந்திருக்கும் போது ''படை வந்து விட்டது'' என்ற கூக்குரல் கேட்டது. ஊரார் எல்லோரும் கோட்டையை நோக்கிப் புறப்பட்டார்கள். எங்கள் தாத்தா தைரியம் மிக்கவர். ''இன்று இந்தப் படம் பூர்த்தியாவதில் சுவாமிக்கு இஷ்டம் இல்லை போலும்'' என்ற வண்ணம் எழுந்திருந்து ஆயுதம் எடுத்துக் கொண்டு கோட்டைக்குப் புறப்பட்டார். வீட்டில் பெண்கள், ''சாப்பிட்ட பின் ' ராகக் கூடாதா?'' என்றார்கள் தாத்தா, சாப்பாடு கோட்டைக்காகக் காத்திருக்கலாம், கோட்டை சாப்பாட்டுக்காகக் காத்திருக்குமா?'' என்றாராம். பெண்கள் வற்புறுத்தவே, என் தாத்தா நிவேதனத்துக்கு வைத்திருந்த வாழைப் பழம் ஒன்றைத் தின்று, ''இதோ வந்துவிட்டேன்'' என்று புறப்பட்டாராம்.

'அன்று வந்த படை லேசான கூட்டம். ஊரில் இருந்த மக்கள் சிலரே. பெயருக்கு எதையாவது கொடுத்திருந்தால் வந்தவர்கள் சென்றிருப்பார்கள். எங்கள் தாத்தா உறுதி மிக்கவர். யாரோ அந்த யோசனை சொன்னதற்கு இவர் சம்மதிக்கவில்லை. கோட்டையின் மேல் நடமாடிக் கொண்டிருக்கையில் படையைச் சேர்ந்த ஒருவன் துப்பாக்கியால் இவரைச் சுட்டு விட்டான். தாத்தா அப்படியே விழுந்து விட்டார். அந்த வேளைக்குச் சரியாக, நில புலன்களுக்குப் போனவர்களும் வந்து விட்டனர். எப்படியோ படையைத் தடுத்தார்கள். விஷயம் தீர்ந்தது. தாத்தாவைத் தூக்கி வந்து வீட்டில் சேர்த்தார்கள். இதயத்துக்கருகே சுட்டிருந்தார்கள். 'இனிப் பயனில்லை' என்னும்படி உயிர் ஊசலாடிக் கொண்டிருந்தது. ஒரு முறை கண்ணைத் திறந்து பார்த்தாராம். அண்ணன் கவனித்துக் கொண்டே இருந்தார். கோட்டைக்குப் போகு முன் இருந்த நினைவு திரும்பியிருக்க வேண்டும். ''இதோ வந்து விட்டேன், படத்தை முடிக்க வேண்டும்'' என்றாராம். சொன்னதுதான் தாமதம், உயிர் போய் விட்டது. எங்கள் பெரிய தாத்தா, தம்பியைப் பிள்ளைபோல் வளர்த்தவர். ''அவன் வரட்டும், சாப்பிடுவோம்'', என்று உட்கார்ந்திருந்தார். நிலைமை இப்படி முடியவே, ''ஐயோ, என் அப்பனே! இரண்டு பிடி சாதம் போட்டு அனுப்பாமல் போனேனே!'' என்று விழுந்து புரண்டாராம். அந்த அழுகையெல்லாம் விவரிப்பானேன்? மேலே நடக்க வேண்டிய காரியங்கள் நடந்தன. அன்று முதல் பெரிய தாத்தா ஒரு மாதிரியாக ஆகிவிட்டார். சில நாட்கள் வரையில் வாசலில் உட்கார்ந்து, ''தம்பி தெருவிலிருந்து வருவான்'' என்று காத்திருப்பாராம். அப்புறம், ''அவன் அப்படியெல்லாம் வரமாட்டான். அவன் மனத்தில் என்ன இருந்ததோ, யாருக்குத் தெரியும், எப்படியும் வருவான்'' என்று சொல்லிக் கொண்டிருந்தாராம். போனவர் திரும்பி வருவதுண்டா? ஆனால் கடைசி வரையில் அவர் அப்படியே சொல்லிக் கொண்டிருந்தார்.'



''அன்று எழுதிக் கொண்டிருந்த சித்திரம் எங்கே?''

'உள்ளே இருக்கிறது.'

''அதைக் கொண்டுவந்து காண்பியுங்கள்.''

''அந்தச் சித்திரத்தைக் காண்பிக்கக் கூடாது என்று எங்கள் பெரியவர்கள் சொல்லியிருக்கிறார்கள்.''

'அது ஏன்?''

''பாதியில் நின்று விட்ட வேலை. அதில் குற்றம் குறை தோன்றலாம். பார்ப்பவர்கள், ''நன்றாக இல்லை'' என்று நினைக்கலாம். எழுதியவருக்குக் கௌரவக் குறைவு ஏற்படும். பார்ப்பவருடைய பக்தி கெடும். அதற்காகப் பெரியவர்கள் வேண்டாம் என்கிறார்கள்.''

''ஐயா, நீங்கள் சொல்லும் கதையைக் கேட்டால் அந்தச் சித்திரக்காரரைப் பற்றி யாரும் குறை சொல்லும்படியாக இல்லை. நாங்கள் இந்தக் கடவுளைப் பூஜிப்பவர்கள் அல்ல. எங்கள் பக்தி கெடாது. கொண்டு வாருங்கள். ஒரு முறை பார்ப்போம்.''

'ஆகட்டும்; துரையவர்கள் மட்டும் வந்திருந்தால், காண்பித்திருப்பேனோ, மாட்டேனோ? அம்மாவும் வந்திருக்கிறார்கள். பார்த்து விட்டுப் போகட்டும், எங்கள் பெரிய தாத்தா அதை யாருக்கும் காண்பிக்கக் கூடாதென்று சொன்னதற்கு வேறு ஒரு காரணமும் இருந்தது. எங்கள் தாத்தா, ''வருகிறேன்'' என்று சொல்லியிருந்தார் அல்லவா! அதனால், ''அவர் வருவார்; வந்து முடிப்பார்'' என்றே அவர் நம்பியிருந்தார்.''

''வருவார் என்றால்?''

'அவர் என்னமோ அப்படிச் சொல்லிக் கொண்டிருந்தார், கடைசி கடைசியாக ''அவர் எங்கள் வீட்டில் திரும்ப வந்து பிறப்பார், பிறந்து வளர்ந்து படத்தை முடிப்பார்'' என்பதான் எங்கள் பெரிய தாத்தா நினைத்துக் கொண்டிருந்தார். அவர் வருவார் என்பதால், ''வந்து முடிக்கும் வரையில் யாருக்கும் காண்பிக்கக் கூடாது'' என்று சொல்லிக் கொண்டிருந்தார். அவர் இருந்த வரையில் யாருக்கும் காண்பிக்கவில்லை. என் தகப்பனார் பிறந்து வளர்ந்து, நான் பிறந்து இருபது வயது இளைஞனாகும் வரையில் பெரிய தாத்தா இருந்தார். 'என் தகப்பனாரிடம் அந்தக் கலை இருக்குமோ?' என்று அவர் எதிர்பார்த்தார். இருக்கவில்லை. நான் சிறுவனாக இருந்த போது என்னைப் பழக்கிப் பார்த்தார். எனக்கும் வரவில்லை. ''எப்போது வருவானோ? பத்திரமாக வைத்திருங்கள்'' என்று சொல்லிவிட்டுப் பெரிய தாத்தா உயிர் விட்டார். இந்த அம்மாளின் முகத்தைப் பார்த்தால் அதை இவர் பார்க்கலாம் என்று என் மனத்தில் படுகிறது. கொண்டு வந்து காண்பிக்கிறேன்.'

''இப்படிச் சொல்லிய கிழவர் உள்ளே போய், இரண்டு படங்களுடன் வந்து, ஒன்றை முன்னால் வைத்தார்.

''அதைப் பார்த்ததும் உண்மையாகவே நான் பிரமித்து விட்டேன். அதில் கலைஞன் என்ன மாயை செய்திருந்தானோ தெரியவில்லை. பேச்சால் வருணிக்க முடியுமா என்று சந்தேகம் வருகிறது. சித்திரத்தில் காற்று வீசுவது கூடக் கண்ணுக்குத் தெரிவது போலவே இருந்தது. அதில் பகவானுடைய குழலிசை அலையலையாகப் பரவுவது தெரிவது போலவே இருந்தது. கிருஷ்ணனுடைய உருவமும் அப்படித்தான். படத்திலிருந்து இறங்கி நடந்து வந்து விடுமோ என்று தோன்றியது. எல்லா விவரங்களும் முதல் படத்தைப் போலவே இருந்தாலும் நமக்குத் தெரியாத ஏதோ ஒரு பகுதியில் சிறிது சிறிது மாற்றம் இருப்பது போலத் தெரிந்தது. படத்தில் புதுமையான ஒரு ஜொலிப்பு இருந்தது. படங்கள் எப்பொழுதோ எண்பது வருடங்களுக்கு முன் எழுதியவையாக இருந்தாலும் வண்ணத்தின் மெருகு குறையவில்லை. அதிலும் இந்தப் படத்தில் சிறிதும் மங்கலே இல்லை. எங்கள் இருவர் முகத்தில் தோன்றியதை விட எமிலியின் முகத்தில் தோன்றிய உற்சாகமே உற்சாகம்! அவள் மூச்சுக் கூட விடாமல் வெறுமனே படத்தையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

''பாதியில் நின்றுவிட்ட படம் இது தானோ?''

''அன்று; இது.''

''கிழவர் படத்தின் மேல் மற்றொரு படத்தை வைத்தார். எமிலி, ''ஆச்சரியம், ஆச்சரியம்!'' என்று கூவினாள்.

''அதே படந்தான்; இன்னும் சிறிது மாயை சேர்ந்திருக்கிறது. சிறிது நேரம் அப்படியே பார்த்திருந்தோம்.''

''ஃபிர்க்கூவர், இதென்ன? அடியில், பசுவின்அருகே தொடங்கியது நின்றுவிட்டதே?'' என்று கேட்டான்.

''அவர் அதை எழுதிக் கொண்டிருந்த போது தான் படை வந்து விட்டதென்று புறப்பட்டுப் போய் விட்டார். இன்னும் சில நாழிகைகளில் படம் முடிந்திருக்கும். எதை வரைவதாக இருந்தாரோ? எப்படிச்சொல்ல முடியும்? எனக்கும் தெரியவில்லை!'' என்றார் கிழவர்.

''படத்தை ஊன்றிப் பார்த்ததில் அது மற்றொரு பசுவின் சித்திரமோ என்று தோன்றியது. அதுதான் என்றும் சொல்ல முடியவில்லை. எமிலி அதையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

''அது என்னவாயிருக்கும் என்று யாருமே சொல்லவில்லையா?'' என்று நான் கேட்டேன்.

''என் பெண் வயிற்றுப் பேரன் ஒரு சிறுவன் இருக்கிறான். அவன் ஏதோ சொன்னான். வேறு யாருக்கும் இது புரியவில்லை'' என்றார் கிழவர்.

---



மேற்கு ஜெர்மனியில் ''மன ஆறுதல் தொலைபேசி'' என்று ஓர் இயக்கம். இந்த சர்விஸுக்கு 25 டெலிபோன் இணைப்புகள் உண்டு. இதில் ஏதாவது ஒரு இணைப்புக்கு டெலிபோன் செய்து நமது மனக்கவலை, துயரம், துன்பம் குறித்து முறையிட்டால் ஆறுதலும், யோசனைகளும் கூறுவார்கள்.

எம். ராகவன்.

''ஐயா, நீங்கள் இந்தப் படத்தை எனக்கு விலைக்குக் கொடுத்தால் வாங்கிக்கொண்டு போய் எங்கள் சீமையில் உங்கள் தாத்தாவுக்குப் புகழ் வரும்படி செய்கிறேன். கொடுப்பீர்களா?'' என்று ஃபர்க்கூவர் கிழவரைக் கேட்டான்.

கிழவர்: ''ஸ்வாமி! எங்கள் பெரிய தாத்தா இந்தப் படத்தை யாருக்கும் காண்பிக்க வேண்டாமென்று உத்தரவிட்டிருக்கிறாராம். நாங்கள் எப்படி விற்க முடியும்?''

ஃபர்க்கூவர்: ''நான் சொந்த உபயோகத்துக்காகக் கேட்கவில்லை. உங்கள் தாத்தாவின் பெயர் பிரபலமாகும்.''

கிழவர்: ''வருவேன் என்றவர் திரும்பி வந்தால்?''

ஃபர்க்கூவர்: ''அது நடக்குமா பெரியவரே? சற்று யோசிக்க வேண்டாமா?''

கிழவர்: ''ஸ்வாமி! நம் யோசனை என்ற பேச்சுக்கு இடம் எங்கே? அவர் சொன்னது அவருக்குத் தான் தெரியும். நாம் அதை எப்படிப் புரிந்து கொள்ள முடியும்? படம் இங்கேயே இருந்தால் நடப்பது நடக்கட்டும். பெரியவர்கள் சொல்லைக் காப்பாற்றியதாக இருக்கும். அப்புறம் கடவுள் சித்தம்.''

ஃபர்க்கூவர்: ''சரி, யோசியுங்கள். நாலைந்து நாட்களில் நாங்கள் மறுபடியும் வருகிறோம். அப்பொழுது முடிவைச் சொல்லுங்கள்.''

''இதையெல்லாம் எமிலி கவனித்ததாகத் தோன்றவில்லை. இத்தனை நேரத்துக்குப் பின் என்னைப் பார்த்து ''இங்கே எதை வரைய நினைத்துப் போயிருக்கிறார் என்பதை நான் சொல்லட்டுமா?'' என்றான். நான், ''சொல்லு'' என்றேன்.

எமிலி: 'இங்கே ஒரு பசுங்கன்று ஓடிவந்து தாயின் மடியில் பால் குடிக்க வேண்டுமென்று நினைத்தபோது, ஸ்வாமி குழலை வாயில் வைத்து ஒரு கரத்தை எழுப்புகிறார். உடனே கன்றின் பசி தீர்ந்து இசையைக் கேட்டுக் கொண்டு நிற்பதுபோல் வரைய வேண்டுமென்று அவர் நினைத்திருக்கிறார். தாயிடம் பாலை ஊட்டினால் மறுபடியும் பசி எடுக்கும். அந்த இசை யமுதத்தைக் குடித்தால் எப்பொழுதும் பசியே இருக்காது. படத்தில் காட்சிகள் எல்லாம் இசை அந்தக் கணத்தில் தான் தொடங்கியிருப்பதைக் காட்டுகின்றன. மற்றக் காட்சிகள் பொதுவான இட்டத்தையொட்டி வரையப் பெற்றவை. இது அப்பொழுது தான் தொடங்கிய இசை இப்படி இருந்தது என்று காட்ட வரைந்தது.

கிழவர்: அப்படியானால் எங்கள் பையன் சொன்னது உண்மை.

நாங்கள்: பையன் என்ன சொன்னான்?

கிழவர்: இதேதான். 'கண்ணன் அப்பொழுதுதான் எதையோ நினைத்து வாசிக்கலாம் என்று குழலை வாயில் வைத்திருக்கிறார். முதல் சுரத்துக்கே காற்றில் சிலிர்ப்பு எழுந்திருக்கிறது. பால் குடிக்க வந்த கன்று பாலூட்டாமல் அப்படியே நின்றிருப்பதைப் பார்'' என்றான். அம்மாவும் அதையே தான் சொல்லுகிறார்கள்.''

''சிறுவனுடைய மேதையின் அபார சக்தியை நினைத்து நாங்கள் வியந்தோம். நிஜமாகவே காற்றில் இன்பச் சிலிர்ப்பு நிறைந்திருப்பதாகத் தோன்றியது. கண்ணனுடைய முகத்தில் புதுமை நிறைந்த பாவம் காணப்பட்டது.

ஃபர்க்கூவர்: அந்தப் பையனை இந்தக் கலையில் பழக்குங்கள் பெரியவரே! முன்னுக்கு வருவான். இந்தப் படத்தை எங்களுக்குக் கொடுப்பதைப் பற்றி யோசித்துப் பாருங்கள். நாலு நாட்களில் நாங்கள் திரும்ப இங்கே வரும்போது சொல்லுங்கள்.

எமிலி ஏதோ சொல்ல வந்தவன் சொல்லாமல் இருந்து விட்டான்.

கிழவர், 'போய் வாருங்கள் ஸ்வாமி'' என்று தாம்பூலம் கொண்டு வந்து கொடுத்தார். நாங்கள் புறப்பட்டு விட்டோம்.

**நா**ங்கள் அங்கே போகும் யோசனையை விட்டு விட்டோம். பணத்தாசையால் கிழவர் படத்தைக் கொடுத்தாலும் கொடுத்து விடலாம். எங்களுக்கும் படம் என்றால் ஆசைதான். ஆனாலும் போவதாக இல்லை. ஏன் என்பதைச் சொல்லுகிறேன்.

நாங்கள் திரும்பி வரும்போது எமிலி புஷ்கரிணியில் சிறிது நேரம் உட்கார்ந்தான். ஃபர்க்கூவர், தான் கொண்டு வந்திருந்த சிற்றுண்டியை வெளியே எடுத்தான். மூவரும் சாப்பிட்டுவிட்டுத் தேநீர் அருந்தினோம். அப்பொழுது எமிலி, ''அண்ணா, இந்தக் குளத்தைப் பார்த்தாயா? எவ்வளவு அழகாய் இருக்கிறது?'' என்றான்.

நான்: ''நன்றாய் இருக்கிறது. ஆனால் தண்ணீர் இல்லை. தவிர அங்கங்கே கற்களும் விழுந்து கொண்டிருக்கின்றன. அங்கேபார். யாரோ வீடு கட்டுவதற்கோ, வேறு எதற்காகவோ இங்கிருந்த பலகைக் கல்லை எடுத்திருக்கிறார்கள்.''

''அண்ணா, அவர்கள் செய்யும் வேலையையே நாமும் செய்வதாக இருந்தோமல்லவா? பார். இப்பொழுது இதில் தண்ணீர் இல்லை. போகட்டும். கட்டிடம் உறுதியாயிருக்கிறது. செடி, செத்தைகளை எடுத்து விட்டுச் சரியாகப் பார்த்துக் கொண்டால்

---

ஒரு அரபு நாட்டுப் பணக்காரர் பம்பாய் ஐந்து நட்சத்திர ஓட்டல் ஒன்றில் தங்கியிருந்தார். அப்போது மழை பெய்தது. உடனே அவர் மழைத் தண்ணீர் உள்ளே வரவேண்டும் என்பதற்காக ஏர்கண்டிஷன் ரூமின் ஜன்னல் கண்ணாடிகள் எல்லாவற்றையும் உடைத்து எறிந்து விட்டு, ரிப்பேர் செலவுக்கான முழுத்தொகையையும் செலுத்தி விட்டார்! மழையைப் பார்த்திராத அவருக்கு மழை மீது அவ்வளவு ஆசை! வியப்பென்ன?

—எம். ராகவன்.



இன்றில்லாவிட்டாலும் நாலு வருடத்திற்குப் பின் தண்ணீர் வரும். இது நல்ல குளம். முன் காலத்தில், தண்ணீருக்காகப் படிகளின் வழியே இறங்கிச் சென்ற இவ்வூர்ப்பெண்களின் கால் சிலம்பின் ஒலி இப்பொழுதும் என் காதில் ஒலிப்பது போல் இருக்கிறது. அவர்கள், இப்பொழுதும் ஏறி இறங்குவது போல் தோன்றுகிறது. குளம் இருந்தால் தண்ணீர் வரலாம். அழகியர் வரலாம். கல்லைப் பெயர்த்துக் கொண்டு போகிறவர்களைபோல, எல்லோரும் தம்மால் ஆனமட்டும் கெடுத்துவிட்டால், தண்ணீர் வரும்போது குளமே இருக்காதே அண்ணா!''

''ஆம் எமிலி. ஆனால் நீ என்ன சொல்கிறாய்?''

''நாம், படம் அழகாயிருக்கிறது என்று படத்தையும் விக்கிரகம் அழகாயிருக்கிறதென்று விக்கிரகத்தையும் வேறு பொருள்கள் அழகாயிருக்கின்றன என்று அவற்றையும் இங்கிருந்து தூக்கிக் கொண்டு போய்விட்டால், இந்தச் சீமை முன்னேறும்போது இவையெல்லாம் இல்லாமலே போய் விடும். நாம் எவ்விதத்தில் கைதூக்கி விட்டதுபோல் ஆகும்?''

''இந்த நாட்டிற்குப் புகழ் வரவேண்டும் என்று தானே படத்தைக் கொண்டு போகிறோம்?''

''அங்கே புகழ் வந்து இங்கே என்ன ஆக வேண்டும்? பையனைக் கலையில் பழக்கச் சொல்லிவிட்டுப் படத்தை வாங்கிக்கொண்டு போய் விட்டால் நாம் எந்தவிதத்தில் உதவி செய்ததாகும்?''

''இதன்பின் நாங்கள் மூவரும் குதிரைகளில் ஏறிக் கொண்டு ஊரை நோக்கிப் புறப்பட்டோம். சிறிது தூரம் வந்தபின், எமிலி, ''அண்ணா, உடலிலிருந்து உயிர் போவதும் அந்த உடலில் மற்றோர் உயிர் வந்து சேருவதும் உண்டென்று இவர்கள் சொல்வதைக் கேட்டிருக்கிறாயா?'' என்றாள்.

''கேட்டிருக்கிறேன்.''

''அதை, ''கூடு விட்டுக் கூடு பாய்தல்'' என்கிறார்கள். உயிர் எங்கேயாவது போயிருக்கும்போது அதன் உடலை மறைத்துவிட்டாலும், அடையாளந்தெரியாமல் செய்துவிட்டாலும் உயிர் திரும்பி வந்து உடலைக் காணாமல் தவித்து அலையுமாம்.''

''ஆம்.''

''அண்ணா, இந்த ஜனங்கள் பாரதமாதா என்கிறார்களே, அந்த அழகி இப்பொழுது ஜன்னி கண்டு படுத்திருக்கிறாள். குழந்தைகள் அவள் அருகே உட்கார்ந்து, ''அம்மா!'' என்று அழுகின்றன. உடலைப் பார்த்தால் உயிர் இன்றோ நாளையோ திரும்பி வரும் களை இருக்கிறது. இந்தச் சந்தர்ப்பத்தில் நாம் இந்த உடலில் உள்ள வளை, மோதிரம், மூக்குத்தி ஆகியவற்றைக் கழற்றி உருமாற்றி விட்டால் உயிர் வந்து காணும் போது அதற்கு உடலின் அடையாளம் புரியாமலே போய் விடும். உடலை அப்புறப்படுத்தினாலும் அதே நிலைதான். ''அம்மா!'' என்று குழந்தைகள் ஓலமிடுகின்றன. அழுகுரல் கேட்டுத் தாயின் உயிர் அலைந்து அலைந்து திரும்பி வரலாம். வந்து நிலைக்க உடம்பு இல்லாமல் அது துன்புறும் அண்ணா. நாம் இதைச் செய்யக்கூடாது.''

இப்படிச் சொன்ன போது எமிலிக்குக் கண்ணீர் பெருகியது. ஃபர்க்கூவர் வேறுபுறமாக முகத்தைத் திருப்பிக் கொண்டிருந்தான். அவன் தன் கைக்குழந்தையான ஜார்ஜை நினைத்துக் கொண்டிருந்தானோ என்னவோ?

''பிறகு ஒரு வார்த்தை கூடப் பேசாமல் நாங்கள் எல்லோரும் திரும்பினோம். அதனால் தான் படத்தைக் கேட்கப் போகவில்லை.

''இவர்களுடைய பண்பாடு சிதைந்து வருகிறதென்று நாம் நம் பண்பாட்டை இங்கே பிரசாரம் செய்வது கூடக் கூடு விட்டுக் கூடு பாய்தலைப் போல் துன்பத்துக்கு காரணமாகுமோ என்று எனக்குச் சந்தேகம் தோன்றியிருக்கிறது.''

# யூனிட் டிவிடெண்டுகள் என்றுமே ஏறுமுகம்தான்!



# UNITS

வருடாவருடம்
யூனிட்டுகள்
மேன்மேலும் அதிக
டிவிடெண்டுகளை
அளித்து வருகின்றன.
1983-84 க்கான
டிவிடெண்ட்
உச்சமான 14 சதவீதம்!

ஆண்டுதோறும் வளர்ந்துவரும் டிவிடெண்ட் அன்றி யூனிட்டுகள் உங்களுக்கு பல்வேறு பலன்களை அளிக்கின்றன. யூனிட்டுகளை எளிதாகவும், சீக்கிரமாகவும் ரொக்கமாக மாற்றிக் கொள்ளலாம். மேலும் யூனிட்டுகள் உங்கள் முதலீட்டிற்கு உறுதி அளிக்கின்றன. விசேஷ வரிச் சலுகைகளும் உண்டு!

இன்றே யூனிட்டுகளில் முதலீடு செய்வீர்! பதினைந்து லட்சத்திற்கும் மேலான மக்களின் நம்பிக்கையை யூனிட்டுகள் பெற்றுள்ளன!

எங்கள் அலுவலகங்கள், வங்கிகள், பிரதான தபால் ஆபீஸ்கள் எங்கள் முக்கிய பிரதிநிதிகள் மற்றும் ஏஜண்டுகள் மூலம் யூனிட்டுகளைப் பெறலாம்.



**யூனிட் டிரஸ்ட் ஆப் இந்தியா**

தலைமை அலுவலகம்: பம்பாய்-400 020.
(ஒரு பொதுத்துறை நிறுவனம்)

பிராந்திய செயலகம்: ரெஜினா மான்ஷன், 46, செகண்ட் லைன் பீச், சென்னை-600 001. போன்: 27433.

கேரளா செயலகம்: 12/758, தெக்கேமடம் சாலை, திருச்சூர்-680 001. போன்: 24690

ஆந்திர பிரதேஷ் செயலகம்: 27-11-6B, மெயின் சாலை, கவர்னர்பேட், விஜயவாடா-520 002. போன்: 63964




தமிழ்நாட்டிலுள்ள எங்கள் முக்கிய பிரதிநிதிகள்: திரு. ஏ. தனபால், 30, ஹோசூர் ரோட், கோயம்புத்தூர் 641 018. (போன்: 34776) மதுரை, ராமநாதபுரம் மாவட்டங்கள்: திரு. எம். ராமமூர்த்தி, 30, எல்.ஐ.ஸி. காலனி, மதுரை-625 002. (போன்: ஆபீஸ் 30160, வீடு: 43179) தஞ்சாவூர் மாவட்டம்: திரு. கே. முத்துசாமி, 52-A, வ.உ.சி. நகர், தஞ்சாவூர்-613 007 (போன்: 1224) சேலம் மாவட்டம்: திரு. என்.கே. இங்கர்சால், 155, ஸ்வர்ணாம்பிகை தெரு, அன்னதானப்பட்டி, சேலம்: 636 002. (போன்: 64302 P.P.) திருநெல்வேலி, கன்யாகுமரி மாவட்டங்கள்: திரு. எம்.எம். காஜா, பக்காளி பில்டிங் அனெக்ஸ், 41-B, திருவனந்தபுரம் நெடுஞ்சாலை, பாளையங்கோட்டை-627 002. போன்: 4520 (ஆபீஸ்) 5395 (வீடு) திருச்சி மாவட்டம்: திரு. எம். ராமலிங்கம், 21-A, கான்வென்ட் ரோடு, திருச்சிராப்பள்ளி 620 001. (போன்: 28280)

Sista's-UTI.209.84.TM A

அத்தனை பெரிய கூடத்தில், கூட்டம் நிரம்பி வழிகிறது. கூடத்தின் நடுவில் — தெற்கு வடக்காகக் கிடத்தி வைக்கப்பட்டிருக்கிறாள் விஜி.

பேச்சில்லை என்கிற ஒரே குறையைத்தவிர —வேறு குறை எதுவுமே இல்லாத அந்தப் பூ-வசந்தத்தைக் காணுமலேயே கருகிவிட்டது..

பரந்தாமன் — அவளது சடலத்தின் முன், புழு போலக் குன்றி நிற்கிறார்.

அன்றைக்கு அவர் அடித்த அடி பலம் தான். இருந்தாலும் உயிர் போகின்ற அளவுக்கு அடித்ததாக அவரால் ஒப்புக் கொள்ள முடியவில்லை.

இது மாதிரி எத்தனை பேரை அடித்து அடித்தே உண்மையை வரவழைத்திருக்கிறார் அவர்...

அத்தனை ஏன்... ராஜா, சிறு வயதில் வாங்காத அடியா...?

உடம்பில் எங்கே அடித்தால் ஆபத்தில்லை என்பது அவருக்குத் தெரியாதா...?

அது எப்படி விஜி, 'பொட்'டென்று போனுள்?

அடித்த அடியில் உடம்பெங்கும் ரணமானது உண்மை. அந்த ரணத்தின் கடுமை தாளாமல் காய்ச்சல் வந்ததென்னவோ உண்மை...

பரந்தாமன் அவளை அள்ளிக் கொண்டு ஆஸ்பத்திரிக்குப் போன போது கூட, நெஞ்சுக்குள் அவள் போய் விடுவாள் என்று தோன்றவே இல்லையே...

ஒரு வாரம்... சரியாக ஏழு நாட்கள்... காய்ச்சல் இறங்காமலேயே — நினைவு திரும்பாமலேயே...

இப்படியொரு முடிவை டாக்டர்கள் கூட எதிர்பார்க்கவில்லையே...

''ஜுரம் இறங்கிரு — எல்லாம் சரியா விடும்...''

''ஜுரம் ஏன் இன்னும் இறங்கலே...''

''உடம்பு ரொம்பப் பூஞ்சை சார்...''

''அடி, ரொம்பப் பலமா டாக்டர்...''

—இதைக் கேட்கும் பொழுதே அழுது விட்டார் பரந்தாமன்...

இத்தனை வருஷங்களில் — இந்தப்பெண்ணை ஒரு முறை கூடக் கைநீட்டி அடித்ததில்லை.

அவரது கரங்கள் அவளை நோக்கி நீண்டதெல்லாம், பாசத்தோடு அணைப்பதற்குத்தான்.

அடி பலமோ, இல்லையோ — அதிர்ச்சியே அவளது உயிரைப் பறித்து விட்டது எனலாம்...

ஆஸ்பத்திரியில் சேர்த்த ஏழாம் நாளிரவு.. உடம்பு அனலாய்க் கொதித்தது... தலையணையின் பக்கத்தில் சிலேட்டுப் பலகை — விஜியின் கரம் படாமல் கிடக்கிறது...

இரவு எட்டு மணி சுமாருக்கு — அவளின் வறண்ட இதழ்கள் லேசாகப் பிரிந்தன...

'என்ன கேட்கிறுள்...?'

'தண்ணீரா...?'

மீனுட்சி, அவசர அவசரமாய்த் தண்ணீரை எடுத்து வாயில் ஊற்ற... இமைகளில் மெல்லியத் தென்றல் அடித்தாற் போல ஒரு அசைவு.

அது அசைவுதானு — இல்லை, வெறும் பிரமைதானு?

# சொல் ஒன்று வேண்டும்

அனுராதா ரமணன்



உமா, அவளது தலைமாட்டிலேயே அசையாமல் உட்கார்ந்திருந்தாள்.

இரவு ஒரு மணி வரையில், அறையில் விளக்கு எரிந்து கொண்டுதானிருந்தது.

எமன், உயிரைக் கொண்டு செல்லும் சமயத்தில், சுற்றியுள்ளவர்களின் கண்களைக் கட்டி விடுவானோ என்னவோ...

உமா, கட்டிலின் மீது தலையைப் பதித்தபடி, மடியிலேயே சின்னக் கண்ணனை உறங்க வைத்தபடி, அசந்து தூங்குகிறாள்..

மீனாட்சி சுவரில் சாய்ந்து, உட்கார்ந்த நிலையிலேயே கண்களை மூடிக் கொண்டிருக்கிறாள்...

பரந்தாமன் – அதே அறையின் ஒரு பக்கமாய், சாய்வு நாற்காலியில் சாய்ந்து...

தூக்கம் வரவில்லை. நெஞ்சுக்குள் துக்கம் பந்தாக அடைக்க – கண்களை இறுக மூடி, கண்ணோரத்தில் கசியும் நீரைத் துடைக்க மறந்து...

ஒரு மணி சுமாருக்கு–

'தட்'டென்று தரையில் ஏதோ விழும் ஓசை கேட்டு, கண் விழித்தவர் பரந்தாமன் தான்.

விஜியின் கட்டில் பக்கம் தான் முதலில் பார்வை போயிற்று... மடித்து வைக்கப்பட்டிருந்த கைகளில் ஒன்று, கட்டிலை விட்டு நகர்ந்து ஊசலாட...

மற்றொரு கை–

மார்புச் சேலைக்குள்.

''விஜிம்மா...''



பரபரத்துப் போன பரந்தாமன், அவளது கட்டிலை நெருங்குகையில்...

காலடியில் விஜியின் சிலேட் தட்டுப்பட...

குனிந்து எடுத்தவரின் கண்களில் 'குப்' பென நீர் திரள்கிறது...

சிலேட்டில் 'ராஜா'வின் பெயர் கோணல் மாணலாய்...

எப்பொழுது எழுதினாள் இவள்...

''விஜி...''

அவர், அவளை மெல்லத் தொட—

அடுத்த கணமே அதிர்ந்து போகிறார்.

''விஜி...''

அவரது அலறல், ஆஸ்பத்திரியையே கிடுகிடுக்க வைக்க...

விஜி — சூடு தணிந்து, சுருதி குறைந்து, நிரந்தரமான துயிலில்...

நர்ஸ் ஓடிவந்து, அவள் கைகளை எடுத்துப் பழையபடி மடித்து வைக்க முயன்ற போது தான்...

இடது கை — கழுத்திலிருந்த மஞ்சள் கயிற்றை இறுக்கமாய்ப் பிடித்துக் கொண்டிருந்தது தெரிய வருகிறது...

ஆம், இதுநாள் வரையில் அவள் நெஞ்சோடு சிறை வைக்கப்பட்டிருந்த அந்த மஞ்சள் கயிற்றுக்கு — இன்றுதான் சுதந்திரக் காற்றைச் சுவாசிக்கும் பாக்கியம் கிடைத்திருக்கிறது.

மீனாட்சி, இதைக் கண்டதும் இன்னமும் பெரிசாய் அழத் தொடங்கினாள்.

''ஐயோ... விஜி...''

''எப்படி... எப்படி டாக்டர் இது நடந்தது...?''

---

வாழைக்காய் வயிற்றுப் புண்ணை ஆற்றும் நல் மருந்து என்று இந்தியாவில் வழிவழியாக வரும் நம்பிக்கையை இங்கிலாந்தைச் சேர்ந்த ஆஸ்டின் பல்கலைக் கழக விஞ்ஞானிகள் ஆராய்ச்சி செய்து உறுதிப்படுத்தியுள்ளனர்.

உலர்ந்த வாழைக்காயைப் பவுடராக்கி, அதிலிருந்து எடுக்கப்பட்ட மருந்துச் சத்தைப் பயன்படுத்தி, அது நல்ல பலன் தந்திருப்பதாக ஆராய்ந்திருக்கிறார்கள்.

தகவல்: எஸ். ஏ. துரை.




---

''எங்களுக்கே புரியாத புதிராகத்தான் இருக்கு. அடியிலை மட்டும் இந்த உயிர் போகலை. காய்ச்சல் உச்சக் கட்டத்துக்குப் போய் — திடீர்னு இறங்க ஆரம்பிச்சிருக்கு... அந்தப் பொண்ணுக்கு அதிர்ச்சியே எமனாயிடுச்சு...''

உயிர் பிரிந்ததற்குப் பிறகு ஆயிரம் காரணங்களை இந்த டாக்டர்கள் சொல்லலாம். என்ன பயன்... போனவளைக் கொண்டு வந்து விட முடியுமா என்ன...?

பரந்தாமன், மறுபடியும் தன்னிரு கைகளிலும், வாடிப்போன பூமாலையைத் தூக்கிக் கொண்டு, காரிலேறுகிறார்...

இதோ—

வீட்டுக் கூடத்தில் கிடத்தி வைக்கப்பட்டிருக்கிறாள் விஜி...

இன்னும் இவளின் கடைசிப் பயணத்துக்கான ஆயத்தங்கள் எதுவுமே ஆரம்பிக்கவில்லை.

எல்லாவற்றுக்கும் காரணம் — அவள் கழுத்தில் கிடந்த மஞ்சள் கயிறுதான்.

இது எப்படி வந்தது?

யார் கட்டியது...

பரந்தாமன் — அவளது அறையைக் குடைய, மேசை இழுப்பறையில் கிடைத்த— அவளது டைரி, எல்லாவற்றையும் விளக்க...

உமா—ராஜாவின் கல்யாணத்தின் போதே இந்தப் பெண், இப்படியொரு காரியத்தைச் செய்திருக்கிறாளா...

டைரியைப் படித்த உமா, விஜியைக் கட்டிக் கொண்டு விம்முகிறாள்.

'இந்த ஊமை மனசுக்குள்ள... எத்தனை துக்கங்களை அடைச்சு வச்சிருந்தேம்மா நீ...'.

—பிரச்னை இங்குதான் ஆரம்பமாயிற்று.

விஜியைக் குளிப்பாட்டி எடுத்துப்போக ஆட்கள் வந்த போது, உமா தீர்மானமாகச் சொல்லி விட்டாள்.

''இதப் பாருங்க. அவர் வந்துதான் இவளை எடுக்கணும். ஆமா சொல்லிட்டேன்...''

''அவன் எங்கே இருக்கானோ... அவனுக்கு எப்படி விஷயத்தைத் தெரிவிச்சு, எங்கேயிருந்தும்மா வருவான்...''

பரந்தாமன் உடைந்த குரலில் சொல்ல—

''பார்க்கலாம். வந்தால் சரி. வரலைன்னா — என் மகன் இவளுக்கு நெருப்பு போடட்டும்... என்னிக்கு இவ, எங்க கல்யாண முகூர்த்தத்துல, இவரையே கணவனா வரிச்சு, தன் கழுத்துல தானே தாலியக் கட்டிட்டாளோ... அன்னிக்கே— இவ என் குழந்தைக்கும் தாயாகியாச்சு... எதுக்கும், நாளைக் காலை வரைக்கும் பார்ப்போம்... இப்பவே இருட்ட ஆரம்பிச்சாச்சு... இந்த இருட்டுல, யாருமில்லாத அனாதையா, என் கணவரோட மனைவிக்கு யாரோ கொள்ளி போடறதை நான் ஏத்துக்க மாட்டேன்...''

''யாரோ போடப் போறதில்லேம்மா. நான் தான் போடப் போறேன்...''

பரந்தாமனின் குரல் தழுதழுக்கிறது...

''நீங்களா...''

உமா, அத்தனை துக்கத்திலும் விரக்தி மேலிடச் சிரிக்கிறாள்...

"நீங்க புதுசா வேற அவனுக்குக்கொள்ளி போடணுமா என்ன? அதான், ஏற்கெனவே நிறையப் போட்டுட்டீங்களே..."

என்ன செய்வார் பரந்தாமன்.

நடுஹாலில் கிடத்தப்பட்டிருந்த விஜியின் உடம்பை, மறுநாள் காலை வரையில் பாதுகாக்க, ஐஸ் கட்டிகள் கொண்டு வரப்பட்டன...

எப்பொழுதும் ராஜாவைப் பற்றிய நினைப்பிலேயே வெந்து கொண்டிருந்த இதயம் — இப்பொழுது குளிரக் குளிர, பனிக் கட்டியின் மீது பள்ளி கொண்டிருக்கிறது...

எத்தனை நேரம் இவனது முகத்தைப் பார்த்துக் கொண்டிருக்க முடியும்...?

பரந்தாமன், அழுகையில் கன்றிப்போயிருந்த முகத்தை அழுந்தத் துடைத்தபடி மீனாட்சியைத் தேடிப் போகிறார்...

அவளோ—

கட்டிலில் படுத்து, சிறு குழந்தை போல, வாய் விட்டு அழுது கொண்டிருக்கிறாள்...

"என் காலைச் சுத்தி சுத்தி வந்த பொன்னை இப்படி அடிச்சே கொன்னுட்டீங்களே..."

"மீனு... நான் கொலைகாரன்தான்... அவனை அடிச்சே கொன்னவன்தான்... எனக்கு என்ன தண்டனை கொடுத்தாலும் வாங்கிக்கறேன்..."

"உங்களுக்கெல்லாம் ஏது தண்டனை... போலீஸ்காரங்க இல்லே... நீங்க செய்யற கொலையெல்லாம் தான் உங்க காக்கி உடுப்புல மறைஞ்சுப் போயிடுதே..."

"இல்லே மீனு... காக்கி உடுப்புக்கும் இதே நீதி — இதே தண்டனையெல்லாம் உண்டு... இந்தக் கொலைக்காக நான் என்ன தண்டனையைக் கோர்ட் கொடுத்தாலும் வாங்கிக்கத் தயாரா இருக்கேன்... ஆனா... அவ இறந்தது என்னோட அடியால இல்லேன்னு எனக்கு முன்னாடி டாக்டர்கள் எழுதிக் கொடுத்துட்டாங்களே... என்ன செய்யறது..."

அவர், இங்கே புலம்பிக் கொண்டிருந்த அதே நேரத்தில்...

மேல் மாடியின் — இடது கோடியில், உமாவின் அறைப் பக்கமாய்...

ராஜா வந்து நிற்கிறான்.

இப்போதைக்கு இந்த இடம் தான் தகுந்த பாதுகாப்பு உள்ள இடம்...

அவன், சட்டென அவளது அறைக்குள் புகுந்து — மூடியிருந்த கதவிடுக்கு வழியே—

கீழே பரவிக் கிடந்த கூடத்தை விழிகளால் துழாவ...

நடுக் கூடத்தில் தலையோடு கால்போர்த்தி வைக்கப்பட்டிருந்த சடலத்தைக் கண்டதும், துக்கத்தில் முகம் சிவக்க...

அவன் பார்த்துக் கொண்டிருந்த போதே— அறைக் கதவு வேகமாய்த் திறக்கப்படுகிறது.

தோளில் தூங்கும் சின்னக்கண்ணனைப் படுக்க வைப்பதற்காக உள்ளே வந்த உமா—

அதிர்ச்சியில் அலற வாய் திறந்தவள்—

'கப்'பென வாயைப் பொத்திக் கொள்கிறாள்.

(தொடரும்)

## அருள்வாக்கு

உள்நாட்டுப் பிரஜைகளைப் பொருத்த மட்டில் ராஜா அவர்களை ஸன்மார்க்கத்தில் செலுத்துவதற்காக எதுவுமே பண்ணாமல் அவர்கள் தப்பு பண்ணினால் மாத்திரம் தண்டிப்பது என்று வைத்துக் கொள்ளவில்லை. இந்தநாளில் அரசாட்சி முறைக்கும் பிரஜைகளின் நன்னெறிகளை அபிவிருத்தி செய்வதற்கும் நேர் சம்பந்தமில்லாதது போல அக்காலத்தில் இல்லை. ஜனங்கள் அவரவர் தர்மத்தை அனுசரிப்பதற்கு ராஜா எல்லா விதத்திலும் ஊக்க உற்சாகங்களைக் கொடுத்து வந்தான். ஸத்துக்களைக் கொண்டு நிறைய தர்மப்பிரசாரம் செய்தான். அந்தந்த ஜாதி நாட்டாண்மை அதிலுள்ளவர்களை ஒழுங்குகளுக்குக் கட்டுப்பட்டிருக்கும்படியாகப்பண்ணினான். ஆலயத்தை ஸமூஹத்துக்கு மத்திய ஸ்தானமாக ஆக்கி, ஜனங்கள் ஈச்வர பக்தியால் தர்மிஷ்டர்களாக இருக்கும்படிபண்ணினான். இப்படி நேராக தர்ம ரக்ஷணை பண்ணினதாலேயே அப்படியும் அவர்கள்கெட்டுப் போகிற போது அவர்களை இந்த நாள் 'ஸ்டாண்டர்ட்' படிக் கடுமையாகவே சிக்ஷித்தான். குற்றவாளிகளிடம் கூடுதலாகத் தயாதாக்ஷிண்யம் காட்டுவது குற்றங்களுக்கு ஊக்கம் தருவதே ஆகும் என்பது தான் சாஸ்திர அபிப்பிராயம். இப்போது தான் 'பெர்ஸ்வேஷன்' என்பதால் அவர்களாக மனம் மாறித் திருந்த வேண்டுமென்று நிறையப் பேசுகிறார்கள். 'ஸாதாரண மனுஷ நேச்சர்' இருக்கிற லக்ஷணத்தில் இப்படி எவராவது திருந்தினதாக இவர்களால் காட்ட முடியுமா என்பதே கேள்வி. ஜெயிலில் சௌகர்யமெல்லாம் பண்ணிக் கொடுப்பது என்றால் வெளியிலே வேலை வெட்டி இல்லாமல் திண்டாடுகிறவர்களுக்கு அங்கே (ஜெயிலுக்கு) போய் நாம் பாட்டுக்குத் தின்று கொண்டு, தூங்கிக் கொண்டு இருக்கலாமே' என்றுதான் தோன்றும். தர்ம ரக்ஷணைக்கென்று டைரக்டாக ஸர்க்கார் எதுவும் செய்யாமல், அதேசமயத்தில் அரசியல்வாதிகள் தங்களுக்கும் தங்களுடைய கொள்கைகளுக்கும் ஸமூகத்தில் முக்கியத்துவத்தை உண்டாக்கிக் கொண்டு விட்டதால் தர்ம பீடங்களின் செல்வாக்கும், தர்மசாஸ்திரங்களின் அதாரிட்டியும் மங்கிப்போய் ஜனங்கள் தர்மத்துக்குப் பயப்படவேண்டும் என்ற உணர்ச்சியை இப்போது ரொம்பவும் இழந்து விட்டிருக்கிறார்கள்.

-ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி
சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி
சங்கராசார்ய ஸ்வாமிகள்



# தனக்கு வந்தால்...

**மஞ்சுளா ரமேஷ்**

சந்தடி நிறைந்த அந்த நீண்ட சாலையில்—

ஒரே கூட்டம்.

யாரோ இரண்டு பேர் பேசிக்கொண்டே போனது காதில் விழுந்தது மூர்த்திக்கு.

''சே, கண்றாவியா இருக்குப்பா. என்ன இன்னிக்கெல்லாம் இருபத்தி நாலு இருக்குமோ என்னமோ வயசு. தலையெல்லாம் ரத்தக் காடுதான், போ.''

'ஜில்'லென்று மனத்தைத் தாக்கினாலும் ஒரு உற்சாகம். ஹா, கடைசியில் நாம் நினைத்த காட்சியைப் பார்க்கப் போகிறோம்.

ரொம்ப நாளாகவே மூர்த்திக்கு ஒரு ஆசை. ஒரு விபத்தைப் பார்த்து விட வேண்டுமென்று. அவர் பிள்ளை பாஸ்கர் கூட அதைப் பற்றி வேடிக்கையாகச் சொல்லியிருக்கிறான்—

''பாரும்மா, இந்த அப்பாவோட ஆசையை. அவங்கவங்க தாஜ்மகாலைப் பார்க்கணும், பத்ரிநாத் பார்க்கணும்பாங்க. அப்பாவுக்கு 'ஆக்ஸிடெண்டைப்' பார்க்கணுமாம்!''

''போதுமே உங்க அப்பா புராணம். அவருக்கு என்னிக்குத் தான் புத்தி நேராப் போச்சு?''

என்று நொடிப்பாள் விசாலாட்சி.

அப்பாவும், பிள்ளையும் சேர்ந்து சிரிப்பார்கள். ஆனாலும் பிள்ளை, அப்பா கட்சியைத் தான் ஆதரிப்பான். இருவரும் அப்பா, பிள்ளையைப் போலவா பழகுவார்கள். ஆபீஸில் சக ஊழியர் கேசவன் தன் மகன் பெயிலாகி விட்டதற்காக 'விளாசி' விட்டதாகப் பெருமை பீற்றிக் கொள்ளும்போது இவர் மௌனம் சாதிப்பார்.

பாஸ்கர் அவரைப் பொறுத்தவரை ஒரு நண்பன்தான். சின்னப் பிள்ளையில் குதிரையாக, அப்புறம் கிரிக்கெட் ஆடும் தோழனாக, அப்புறம் பத்திரிகைக் கதைகளை அட்டகாசமாக விமர்சிக்கும் ரசிகனாக இப்படி பிள்ளை வளர வளர அவரும் மனத்தால் வளர்ந்தார். அவன் கல்லூரி விட்டு வரக் கொஞ்ச நேரம் ஆகிவிட்டால் போதும் குட்டி போட்ட பூனைதான்.

''சரிதான் போங்க. அங்க அங்க பெத்தவ தவிப்பா. இங்க எல்லாம் தலைகீழ். வெளிய போனவனுக்கு என்ன வேலையோ. கொஞ்சம் நாழியாப்படாதா என்ன?''

என்று உதட்டைப் பிதுக்குவாள் மனைவி.

நெஞ்சில் வந்து மோதிய மகனின் பெருமையை ஒருபுறம் ஒதுக்கி விட்டு வேகமாகக் கூட்டத்தை நெருங்கி விட்டார். கடைசியில் அவர் ஆசை பூர்த்தியாகப் போகிறது. அவர் பார்க்க விரும்பிய 'ஆக்ஸிடெண்ட்.'

வெளியே எதுவுமே தெரியாமல் சுற்றி வளைத்துக் கொண்டு சுவாரசியமாக வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த மனிதர்களை விலக்கிக் கொண்டு தலையை நீட்டி உள்ளே பார்த்தார்.

யாரோ சொன்னது போலப் பரிதாபம் தான். மோட்டார் பைக் அப்பளமாக நொறுங்கிக் கிடந்தது. அதோடு அந்த விபத்து நின்று விடவில்லை என்பதைப்

---

ஒரு புலவன் மகனை அழைத்துக் கொண்டு அரசனிடம் சென்றான். கருவூலத்திலுள்ள கஞ்சன் ஒரு கிழிந்த பொன்னாடையை மன்னரிடம் புலவருக்குப் பரிசாகத் தரக் கொண்டுவந்து கொடுத்தான். மன்னன் கிழிந்த பொன்னாடை என்று அறியாமல் புலவருக்குத் தந்தான். அந்த ஆடையில் ஜரிகை இழைகளால் செடி, கொடி, இலை, பூ, பழம் என்று பலவித வேலைப்பாடுகள் செய்யப்பட்டிருந்தன.

'அப்பா இது என்ன?' என்றான் மகன். புலவர், ''மகனே இது ஒரு கொடி'' என்றார்.

''அப்பா! இது என்ன?''

''மகனே, இது இலை, இது காய், இது பழம்'' என்று புலவர் பதில் கூற, மகன் ''அப்பா! பிஞ்சும் இருக்கிறது'' என்று கிழிந்திருப்பதை நயமாக வெளிப்படுத்தினான். மன்னன் மனம் வருந்தி, புலவருக்குப் புது ஆடை பரிசளித்ததுடன் சிறுவனையும் பாராட்டினான்.

கிருபானந்த வாரியார் கூறக்கேட்டவர்:

—பத்மா தேசிகன்.



பத்தடி தள்ளி நின்றிருந்த பஸ் சாட்சி சொன்னது.

வெற்றிலையைப் புகையிலேயோடு சேர்த்து ஸ்வாரஸ்யமாக மென்று கொண்டிருந்த ஜிப்பாக்காரர் விலாவாரியாக விவரித்துக் கொண்டிருந்தார்.

''நான் கடையிலே வெத்தலை வாங்கின்டிருக்கேன். 'டமால்'ன்னு ஒரு சத்தம். என்னடா, ஏதேனும் வண்டியோட டயர் தான் பங்ச்சராச்சாக்கும்னு திரும்பிப் பார்க்கறேன். என்ன கோரம்கறேள்.''

என்று சொல்லும்போதே அனைவரும் அவரை ஆவலோடு பார்க்கிறார்கள். 'கோரம்' என்று சொன்னாரே தவிர, அதில் கதை சொல்லும் சஸ்பென்சும், ஆர்வமும்தான் மின்னியது. வருத்தம் இருந்ததாகத் தெரியவில்லை.

''சின்னப் பிள்ளைங்காணும். வயசுப் பிள்ளை. கூலிங்கிளாசை மாட்டிண்டு வந்திட்டிருந்தான். எதிர்க்க கம்பியேத்தின லாரி. ஃபுல் லோடு போட்டிருப்பான் போல. கண்ணுமண்ணு தெரியாம வந்திருக்கான். திடீர்னு அந்த லாரி வேகமா தடதடன்னு வரவும் பையன் கொஞ்சம் பயந்துபோயிட்டான். 'சட்'டென்று வேகத்தைக் குறைச்சுட்டான். இத பின்னாடி வந்த பி.டி.சிக்காரன் எதிர்பார்க்கலே. அவன் இவனை ஓவர்டேக்பண்ணணும்னு அப்பத்தான் வேகத்தைக் கூட்டித் திருப்பியிருக்கான் பாரு...''

அந்தக் காட்சி எல்லார் கண்களிலும் விரிந்தது. வளைத்துத் திருப்பிய பஸ். மோட்டார் பைக்கை வேகமாகஇடிக்க பைக். நொறுங்கித் தூரப் போய் விழுந்திருக்கிறது. அந்த இளைஞன் தூக்கியெறியப் பட்டிருக்கிறான்.

பஸ் ஓரிடம், பைக் ஓரிடம், இளைஞன் விழுந்தது ஓரிடம் என்று சாட்சி சொல்வது போல ஆங்காங்கே பொருள்கள் சிதறிக் கிடக்கின்றன. காரியர் பேக் விழுந்துபோய் நடுரோடில், கூலிங் கிளாஸ் தனியாகக் கறுப்புத் தார் ரோடில் 'பளபள'வென்று மின்னிக் கொண்டிருக்கிறது. பதினைந்தடி தள்ளிச் சிவப்பாக இரத்தம் இன்னும் உறையாமல் குட்டையாகத் தேங்கிக் கிடக்கிறது.

மூர்த்திக்கு வருத்தம். இன்னும் ஒரு ஐந்து நிமிஷம் முன்னாடி வந்திருந்தால் நேரடியாகவே விபத்தைப் பார்த்திருக்கலாம். இப்போது கால் மணி நேரம் லேட்.

போன வருஷம் பாஸ்கருடைய பிறந்த நாளிற்கு ரொம்ப



# தேர்தல் நெருங்குகிறது!

இந்த ஆண்டு முடிவதற்குள்ளே தேர்தல் நடந்து முடிந்து விடலாம் என்பதாகப் பத்திரிகைகளில் செய்தி.

உங்கள் தொகுதியில் எந்தக்கட்சி சார்பாக யார், யார் வேட்பாளராக நின்று யார் வெற்றி பெறப் போகிறாரோ அது ஒருபுறமிருக்கட்டும்;

கட்சி சார்புள்ளவரோ, இல்லையோ தேச நலன் கருதி உங்கள் தொகுதியில் யார் வேட்பாளராக நின்று தேர்ந்தெடுக்கப்பட வேண்டும் என்று நீங்கள் விரும்புகிறீர்கள், ஏன்? அவரைப்பற்றியும், அவரிடம் நீங்கள் எதிர்பார்ப்பது குறித்தும் கல்வியில் ஒரு பக்கத்துக்கு மேற்படாத வகையில் எழுதி அனுப்புங்கள்.

சுவையாக எழுதப்படும் கட்டுரைகள் பிரசுரமாகி பரிசு பெறும். புகைப்படத்துக்குத் தனியே சன்மானம் உண்டு.

உறையின் மேல் ''நான் விரும்பும் வேட்பாளர்'' என்று குறிப்பிடவும்.



# நீங்கள் விரும்பும் வேட்பாளர் யார்?

தானாக அவன் கேட்டுக் கொண்டிருந்த மைனர் செயினை வாங்கப் போனார். விசாலம் கூட,

''இது என்ன புள்ளைக் குழந்தைக்கு நகை ஆசை. அவனோட சேர்ந்து நீங்களும் கூத்தடிக்கிறேன்'' என்று அவர்களோடு வர மறுத்தாள்.

''போடி, உனக்கென்ன தெரியும். இப்ப அதுதான் ஃபேஷனும். நமக்கென்ன பொண்ணு, வேற புள்ளையா? அவன் ஒருத்தன்தானே? ஆசைப்பட்டான், வாங்கிக் கொடுக்கிறேன்...'' என்று மனைவியை விட்டுவிட்டுப் போனார்.

மூன்று பவுனில் புலிநகம் டாலர் பதித்த சங்கிலியை வாங்கிக் கொண்டு திரும்பிக் கொண்டிருக்கிற போதுதான் அந்த விபத்தைத் தவற விட்டார்.

....ஆனால் அது ஆட்டோ ரிக்ஷா வேனுடன் மோதிய விபத்து. எல்லாம் நடந்துமுடிந்து ரோடெல்லாம் கண்ணாடிகள் கிடந்தது தான் மிச்சம். மிகவும் நெரிசலான சாலையென்பதால் எல்லாவற்றையும் அகற்றி விட்டிருந்தார்கள்.

இப்போதும் 'மிஸ்'ஸாகி விட்டது.பரவாயில்லை. அடுத்த தடவையாவது முறையாக விபத்தையே பார்க்கலாம். இப்பொழுது ஒரு சிறு குறைதான். பையனை உடனே ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போய் விட்டிருந்தார்கள்.

அதற்குள் ஒரு போலீஸ் வேன் வந்து நின்றது. அவர்களின் மேற்பார்வையில் 'பைக்' எடுத்து நிறுத்தப்பட்டது. சக்கரம் எல்லாம் நிற்க முடியாமல் தள்ளாடின. ஒருவர் பஸ்ஸில் ஏறி பஸ்ஸை ஓரமாகக் கொண்டு போய் நிறுத்தினார்.

எல்லோரும் கண்கொட்டாமல் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தார்கள். வாய்கள் மட்டும் அவரவர்கள் பார்த்த விபத்துக்களை விவரித்துக் கொண்டிருந்தன. தோளில் கிடந்த துண்டை, வேடிக்கைபார்க்கும் சுவாரஸ்யத்தில் கன ஜோராக முண்டாசாகக் கட்டிக்கொண்டார் ஒருவர்.

''காஞ்சிபுரத்துக்குச் சரக்கு எடுக்கப் போயிட்டு வந்துக்கிட்டிருக்கேன், பாருங்க. ரோடு ஓரமா பள்ளத்துல லாரியொண்ணு தலைகீழா கவுந்துக்கிட்டு கெடக்குது. தலைகீழான்னு தலைகீழா. சக்கரமெல்லாம் மேல. ராத்திரி எத்தனை நேரத்துக்கு நடந்துச்சோ, தெரியலை. அங்கேயே டிரைவர் அவுட். கிரேன் வந்து தூக்கிக்கிட்டு இருந்துச்சு...''

''ஆமாங்க. இந்த லாரிக்காரங்களால வர்ற அவஸ்தைதான். கண்ணுமண்ணு தெரியாம ஓட்டறானுங்க. ராத்திரி வேளையானு கூட பரவாயில்லை. பட்டப் பகல்ல இப்படி நடந்துடுச்சே...''

''அது என்னமோ காஞ்சிபுரம், விழுப்புரம் போற ரூட்ல தெனத்துக்கும் ஒரு லாரி கவுந்து கிடக்கும். இதப்பாத்துப் பாத்துப் பழக்கமாப் போய் பஸ்ல போறவங்க கண்டுக்கறதே இல்லை...''

''ஆமா ஒரு நாளைக்கு ஆயிரத்தெட்டு ஆக்சிடெண்டு. அவனவனுக்கு இருக்கற

வேலைங்கன்னா இதையெல்லாம் யார்பார்த்துக் கிட்டு நிக்கறது...?''

என்றார் மூர்த்தி, போலீஸ்காரர்களின் நடமாட்டத்தைக் கவனித்துக் கொண்டே.

பக்கத்திலிருந்த மீசைக்காரர் மூர்த்தியைப் பார்த்து நமட்டுச் சிரிப்புச் சிரித்தார்.

''அந்த முண்டா கட்டுன ஆளு அடிக்கடி விழுப்புரம் போறவர் போல இருக்கு. அதான் அதப் பத்தியே திரும்பத் திரும்பச் சொல்றாரு. எல்லா ஹைவேஸ்லேயும் தெனமும் நடக்கற சங்கதிதாங்க...''

மூர்த்தியும் அவர் சொல்வதை ஆமோதிப்பதைப் போல மரியாதையுடன் புன்னகைத்தார். இன்ஸ்பெக்டர் போலிருந்த ஒருவர் தூர வீசிக் கிடந்த மோட்டார் பைக்கின் காரியரை எடுத்தார். நல்ல ரெண்டு மணி வெயிலில் அதற்குக் கீழ் ஏதோ 'தகதக' வென்றது. அதைக் கைகளால் எடுத்தார் இன்ஸ்பெக்டர். ஏதோ சங்கிலிபோலும். மூர்த்திக்குத் 'துணுக்'கென்றது.

அதேசமயம் இன்ஸ்பெக்டர் இவர்களை நோக்கி வேகமாக வந்து கேட்டார்:

''இங்க ஆக்சிடெண்ட் நடக்கறப்ப ஸ்பாட்ல யாராச்சும் இருந்தீங்களா? என்னு எடுத்துக்கிட்டுப் போனது பையனோட பாடியைத்தான். ஆனா சங்கிலி ஒண்ணு இருக்குதே...''

இப்போது முண்டாசுக்காரர் சங்கிலியை இன்ஸ்பெக்டரின் உள்ளங்கையில் எட்டிப் பார்த்து விட்டுச் சொன்னார்:

''இது லேடீஸ் போட்டுக்கற சங்கிலி இல்லீங்க. மைனர் செயின். இப்பதான் பையனுங்க போட்டுக்கறாங்களே...''

என்ன தோன்றிற்றோ என்னவோ, மூர்த்தி, தனக்கு முன்னிருந்த நாலுபேரைத் தள்ளிவிட்டு வெகு வேகமாக இன்ஸ்பெக்டரை அடைந்து, அவர் கையிலிருந்த சங்கிலியை வெடுக்கென்று பிடுங்கி எடுத்தார்.

புலிநகம் கோத்த மூன்று பவுன் சங்கிலி. புலிநகத்தில் 'பாஸ்கர்' என்ற எழுத்துக்கள் மேல் பட்டையில் மின்னின.

''ஐயோ, பாஸ்கர்!'' - அலறலுடன் அப்படியே மடிந்து விழுந்தார்.

காலையில் ஆபீசுக்குப் புறப்படும் மனைவி சீறியது மெல்லிய குரலில் அவருக்கு உறைத்தது.

''உங்க பிள்ளைக்கு ஆனாலும் ரொம்பச் செல்லம் கொடுக்கறேள். அவன் ஃப்ரெண்ட் மோட்டார் பைக்கை எடுத்துக்கிட்டு ஊரெல்லாம் சுத்தறான். பத்தாததுக்கு அவனுக்கு ஒண்ணு சொந்தமா வாங்கிக்கொடுக்கணும்னு அலையறேள். படிப்புத்தான் ஒண்ணையும் காணோம்...''

''ஐயோ, விசாலம் உனக்கென்ன பதில் சொல்லப் போறேன்...?'' என்று தலையில் அடித்துக் கொண்ட மூர்த்தியை விதிர் விதிர்ப்புடன் பார்த்தது கூட்டம்.

இத்தனை நேரம் தங்களுடன் சேர்ந்து சுவாரஸ்யமாகக் கதையடித்துக் கொண்டிருந்த மனிதரின் அந்தரங்க ஆசை அந்தரங்க துக்க மாக மாறிப் போனதைக் கண்டு கூட்டம் அதையும் வேடிக்கை பார்த்தது.

# பட்டுப் புடவைப் பரிசுத் திட்டம்

# அரைப் பக்கச் சிறுகதை

(ஆண்களும் கலந்துகொண்டு பட்டுப் புடவை பரிசு பெற்றால் பிரியமானவருக்குத் தரலாம்)



**போட்டி: 11**

கல்கியில் அரைப்பக்கத்தில் அடங்குகிற மாதிரி (சற்றே கூடக் குறையப் போனால் பாதகமில்லை.) ஒரு கதை எழுதவும். சற்று யோசித்தால் உங்கள் வாழ்க்கை அனுபவம் ஒன்றே கைகொடுக்கும். இந்த அரைப்பக்கத்தை கத்தரித்து சிறுகதையுடன் இணைத்து அனுப்புங்கள். பிரசுரத்துக்கு ஏற்கப்படும் சிறுகதைகளை எழுதியவர்களின் பெயர் விலாசங்கள் கல்கியில் ஒட்டு மொத்தமாய் பிரசுரமாகும். குலுக்கல் முறையில் ஒருவருக்குப் பட்டுப்புடவை பரிசு கிடைக்கும். பிறகு வாரம்ஒன்றாக பிரசுரமாகும் எல்லாச் சிறுகதைகளுக்கும் சன்மானம் உண்டு. உறையின்மீது ''அரைப்பக்கச் சிறுகதை'' என்று குறிப்பிட வேண்டும்.

முடிவு தேதி: 30.7.84.

**42 பட்டுப் புடவைகளுள் ஒன்றை நீங்கள் பெற வாரம்தவறாமல்போட்டிகளில் பங்கு பெறவும்.**

என் பெயர் : ........................

விலாசம் : ........................

........................

........................


" இப்பவாவது தெரிஞ்சுதா ஒங்க பிள்ளை ஏன் என்னை கலியாணம் பண்ணிகிட்டார்னு? வந்த நாளிலிருந்தே என் ராகமாலிகா புடவையிலே படுத்து தூங்கியே காலத்தை கழிக்கிறாரு"

## வட்டமேஜை

● உழைப்பின் உயர்வை விளக்கும் வகையில் கனஜோராக மலர்ந்து இருந்தது விமலாரமணி அவர்களின் 'அக்னிக் கோடுகள்'' சிறுகதை. ''மறந்தும் பிறன் கேடு சூழற்க...'' என்ற குறள் நினைவு வந்தது.
சென்னை—23, எம். கே. கல்பனா.

● ''நேரம் நல்ல நேரம்'' அதி அற்புதமாய் உள்ளது. வாரம் 7 நாட்களும் வியாழக்கிழமையாகவே இருந்து விடக் கூடாதா? என்ற ஏக்கம் ஏற்படுகிறது.
சென்னை—5. —குடந்தை ராமன்.

● மசாலா மாயையில் சிக்கியுள்ள தமிழ் பட உலகைக் கோமலைப் போன்ற ஒரு சிலரால் மட்டுமே நல்வழிப் பாதையில் அழைத்துச் செல்ல முடியும்.
அரூர், மு. மதிவாணன்.

● ''இப்பல்லாம் நான் 'ஷேவிங்'செய்ய பிளேடே வாங்கறதில்லே''.
''ஏன்?''
''அதான் வாராவாரம் கல்கியில ஃப்ரீயா கிடைக்குதே!''
பாண்டிச்சேரி—1, —டி. நாராயணமூர்த்தி.




● 1.7.84 கல்கி இதழில் வெளியான 'உமாபதி'யின் மூன்று கார்ட்டூன்களுமே அற்புதம். நுழைவுத் தேர்வு பற்றிய கார்ட்டூன் டாப் டக்கர். அதை ''டாப்''பில் போட்டிருக்கலாம்.
தஞ்சாவூர்—1, வி. எஸ். சுதர்சனம்)

● ஒரு தமிழகக் கனவு கட்டுரையில் ஒரு முக்கியமான செய்தி விடப்பட்டுள்ளது. தேசிய விருது எங்கள் படத்திற்கு கிடைத்த செய்தி தெரிந்தவுடன் திரு. கமலஹாசன், திருமதி. கமலஹாசன் இருவரும் பாராட்டுத் தெரிவித்து மலர்க் கொத்தை அனுப்பினர்.
சென்னை—14, விஜய லக்ஷ்மி தேசிகன். (தயாரிப்பாளர்).

● 'இல்லாத வசதியும், இமயச் சுமையும்' என்ற கட்டுரை டெலிபோன் பூத்தில் அவதியுறும் என் போன்ற ஜனமூற்றோர்களுக்கு மன ஆறுதல் அளிப்பதாயும், அதே சமயத்தில் எங்களின் குறைகளை எடுத்துக் கூறுவதாகவும் இருந்தது.
சென்னை—28, எஸ். ராமகிருஷ்ணன்.

● தற்போது, கலைக்கல்லூரிகளில், புதிதாகச் சேரும் மாணவர்களில் சிலர், பின்னர், தொழிற்கல்லூரிகளில் இடம் கிடைத்தவுடன் மாறி விடுகின்றனர்.

அந்த நேரத்தில் கலைக்கல்லூரிகளில் முதலாவது செமஸ்டர் முடியும் நிலையில் இருக்கும் என்பதால், வேறு மாணவர்களைச் சேர்ப்பதும் இயலாததாகி விடுகிறது. அரசு தொழிற் கல்லூரிகளுக்குத் தேர்ந்தெடுக்கப்படுபவர்களின் விவரங்களை விரைவில் வெளியிட வேண்டும்.
நீடாமங்கலம், —4. எஸ்.ஏ.கோவிந்தகுமார்.

● பஞ்சாப் பிரச்னையாகட்டும் பம்பாய் பிவாண்டியாகட்டும் அஸ்ஸாமாகட்டும், எங்குமே இந்தப் பிரச்னைகளுக்கு முடிவு மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளால் எடுக்கப்படவில்லை. ராணுவம் வந்து தான் சாதாரண குடிமகனுக்கு இந்தத் தொந்தரவுகளிலிருந்து விடுதலை தர முடிந்திருக்கிறது. யாருமே இம்மாதிரி நடவடிக்கைகளின் பின்னால் உள்ள ஜனநாயக எதிர்ப்புணர்வைப் புரிந்து கொள்ளவில்லை. ராணுவம் வந்து தான் எந்த இடத்திலும் அமைதியை நிலைநாட்ட முடியுமென்றால், அது, நமது தலைவர்களுக்கு (ஆளும் கட்சியானாலும் சரி, எதிர்க்கட்சியானாலும் சரி) நேர்மையினால் உருவாகும் தார்மீக பலமும் மக்களிடையே செல்வாக்கும் ராஜதந்திரமும் இல்லை என்பதையே சுட்டிக் காட்டுகிறது. ஆன்மீக பலத்தாலேயே மக்களை இணைத்து அஹிம்சா வழியில் போராடி சுதந்திரம் பெற்ற காந்திஜி வாழ்ந்த நாட்டில் இந்நிலை வெட்கக் கேடானது.
பம்பாய்—8, ஆர். வசந்தா ராம்தாஸ்.

## பிரச்னைக்கு முடிவு —— ராணுவம் தானா?

(கடைசிக் கடிதம் பரிசு பெறுகிறது)

# நான் பிரதமரானால்...!

**எல். மங்கையர்க்கரசி, நெய்வேலி.**

குருட்டு அதிர்ஷ்டத்தில் நம்பிக்கை வைத்துக் கைப்பணத்தையும் இழக்கச் செய்யும் லாட்டரி சீட்டுக்கு இந்தியா முழுவதிலும் தடை விதிப்பேன்.

**லட்சுமி கண்ணன், பம்பாய்-22**

நமது நாட்டின் சிறிய கிராமங்கள் முதல் பெரிய நகரங்கள் வரை அனைத்து இடங்களிலும் பத்து நபர்களுக்கு ஒன்று வீதம் கழிவறைகள் கட்டச் செய்து அவைகளைச் சுத்தமாகப் பராமரிக்கக் கடுமையான சட்டம் இயற்றுவேன்.

**எஸ். எல். விஜயா, பம்பாய்-89.**

வேலை நிறுத்தம் என்ற பேச்சுக்கே இடமில்லாமல் எல்லோரும் முறையாக வேலைக்கு சென்று உற்பத்தியைப் பெருக்கும் வண்ணம் சட்டம் கொணர்வேன்.

**கோ. அனந்தலட்சுமி, நாகர்கோவில்-2**

தொகுதிகளில் வேட்பாளர்களுக்குப் பதில் கட்சிகளைத் தேர்ந்தெடுத்து விகிதாச்சார முறைப்படி ஆட்சி அமைக்கத் தேர்தல் முறையை மாற்றுவேன்.

**இரா. கணபதி, சென்னை-20**

உணவுப் பொருளில் கலப்படம் செய்தலை விஷம் வைத்துக் கொலை செய்யும் முயற்சியாகக் கருதி அதற்குண்டான கடும் தண்டனையைக் கலப்படம் செய்வோர்க்கு வழங்க சட்டம் பிறப்பிப்பேன்.

**பானு, சென்னை-91**

அறிஞர்களுடன் ஆலோசித்துத்திட்டமிட்டு புதிய சட்டம் இயற்றி, இந்தியாவைப் பிச்சைக்காரர்களே இல்லாத நாடாக்க முயற்சி செய்வேன்.

**ஸரோஜா சக்ரவர்த்தி, பெங்களூர்-19**

எல்லா பள்ளி, கலாசாலைகளிலும் யோகாசனப் பயிற்சியைக் கட்டாயப் பாடமாக வைப்பேன்.

**எம். நளினி, மதுரை-1**

அரசாங்கத்தின் அனாவசிய, ஆடம்பரச் செலவுகளுக்குத் தடை விதித்துவிட்டு, அந்நிய கடனைக் குறைக்க வழி செய்வேன்.

**வி. எல். கந்தசாமி, சிவகாசி**

உற்பத்தியைப் பெருக்கி, பொருட்களை மக்கள் எளிதில் வாங்க வகை செய்து, ரூபாயின் மதிப்பை மேலும் சரிய விடாமல் காத்து பற்றாக்குறை பட்ஜெட்டைத் தவிர்க்க வழி செய்வேன்.

**ஜி. பத்மாவதி, காளியாகுடி**

பள்ளி மாணவர்களுக்கு தேச பக்தியூட்டி, வன்முறை கலவரங்களால் ஏற்படும் தீமைகளை விளக்கும் ஒரு புதிய புத்தகத்தை, இந்தியா முழுவதும் பாடத் திட்டத்தில் சேர்க்கச் சட்டம் பிறப்பிப்பேன்.

**பி. கே. மூர்த்தி, மதுரை-18**

நாட்டின் பொருளாதார சீர்குலைவுக்குக் காரணமான நாட்டுடைமை மோகத்தைக் கைவிட்டுத் தனியார் துறைக்கு ஆக்கமும் ஊக்கமும் அளிப்பேன்.

**லக்ஷ்மி, திண்டுக்கல்-7**

வானொலித் தொலைக்காட்சியில் அரசின் ஆதிக்கத்தை ஒழித்து, அவற்றைச் சுதந்திர ஸ்தாபனங்கள் ஆக்குவேன்.

**ஆ. நாராயணி, விருதுநகர்-1**

நான் பிரதமர் ஆனால் இந்தியாவில் உள்ள எல்லாப் பள்ளிக்கூடங்களிலும் கண்டிப்பாகப் பள்ளி நேரத்தில் மூன்றில் ஒரு பங்கைத் தொழிற் கல்விக்காக ஒதுக்க வேண்டும் என்று ஆணையிடுவேன்.

**ஆர். மீரா, சென்னை-3**

அட்டெண்டர் வேலைக்கே குறைந்தபட்சப் படிப்புத் தேவைப்படும் போது சட்டமன்ற உறுப்பினராய்ப் பதவி ஏற்பவர் பட்டதாரியாய் இருத்தல் வேண்டும் என்று உத்தரவிடுவேன்.

**நடேஷ் கே. மூர்த்தி, சென்னை-95**

மந்திரிகளுக்குப் பதிலாக நாட்டின் பல துறைகளிலும் உள்ள அறிஞர் பெருமக்களை ஆலோசகர்களாய் நியமித்து அவர்களின் ஆலோசனைப்படிநாட்டின்சட்டதிட்டங்களைத் திருத்தி அமைக்க வழி வகுப்பேன்.

**கே. ஏ. சுகுமார், சென்னை-78**

இராணுவம், வெளி நாட்டுக் கொள்கை, அணுசக்தி, நிதித்துறை, நதி நீர் போன்ற முக்கியமான துறைகளின் அதிகாரங்களை மட்டும் மத்திய அரசிடம் வைத்துக்கொண்டு பிற அதிகாரங்களை மாநிலங்களுக்குப்பிரித்துக் கொடுத்துவிடச் சட்டம் பிறப்பிப்பேன்.

**ஏ. கல்யாண், கோயமுத்தூர்-2**

அனைத்திந்திய அளவில் மது விலக்கை அமுல்படுத்துவேன்.

நபரின் ஜாதி அல்லது மதத்தைக் கேட்கக் கூடாது என்று உத்தரவிடுவேன்.

**ஒய். லலிதா, சென்னை-17**

ஒரு கட்சியின் சார்பில் தேர்தலில் நின்று வெற்றி பெற்ற பிறகு முரணான கொள்கைகள் உடைய வேறு கட்சிக்குத் தாவுவதைத் தடை செய்வேன்.

**வ. வசுதா, சென்னை-17**

அவனன்றி ஓர் அணுவும் அசையாது. ஆதலால் நான் பிறப்பிக்கும் முதல் சட்டம்— 'நாட்டின் எல்லாக் கல்வி நிறுவனங்களிலும் கடவுள் வணக்கத்திற்குப் பிறகே அன்றாட அலுவல்களைத் துவங்கலாம்' — என்பதாகும்.

**எஸ். ஜெயந்தி, சென்னை-13**

தலைவர்களுக்குச் சிலை எடுப்பதோ, விழா நடத்துவதோ, கட்சி செலவில் தான் நிகழ்த்த வேண்டுமே அன்றி அரசின் செல வில் அல்ல என்று சட்டம் இயற்றுவேன்.



**விமலா, தூத்துக்குடி-8**

மொழிவாரி மாநிலங்களை அகற்றி ராஜாஜி சொன்னபடி வடக்கு, வடமேற்கு, கிழக்கு, தெற்கு, தென் கிழக்கு, மத்திய மாநிலங்களை ஏற்படுத்துவேன்.

**பி. மகேஷ்குமார், கோவை-2**

ஆள்வதற்கு ஒரு கட்சி, அதை எதிர்க்க ஒரு பலமுள்ள எதிர்க்கட்சி என்ற இரண்டு கட்சி ஃபார்முலாவைக் கட்டாயமாக்கு வேன்.

**கௌசி நாராயண், கல்கத்தா-29**

நம் நாட்டின் சிறு மூலை முடுக்குகள்கூட துப்புரவாய் இருக்க வேண்டும்; மீறினால் கடும் தண்டனை விதிக்கப்படும் என்று சட்டம் பிறப்பிப்பேன்.

**பி. சுந்தராம்பாள், மணிமங்கலம்**

எந்தத் துறையிலும், விண்ணப்பத் தாளிலோ, நேர்முகத் தேர்விலோ ஒரு

**ஜி. எஸ். பாலகிருஷ்ணன், கோவை-4**

நான் பிரதமர் ஆனால் இயற்கை எழிலைப் பாழாக்குகிறவர்களை எல்லாம் தண்டிக்கச் சட்டம் பிறப்பிப்பேன். மரங்களையும், விலங்குகளையும் அழிப்பவர்கள், நதிகளில் நச்சுப் பொருள்களைக் கழிவுநீருடன் செலுத்தி யும், வான மண்டலத்தைப் புகைமண்டல மாக்கியும் சுகாதாரத்தைக் கெடுக்கும் தொழிற்சாலை உரிமையாளர்கள் ஆகியோர் இத்தண்டனைக்கு உள்ளாவர்.

**கே. சுபமயூரநாதன், மயிலாடுதுறை**

எல்லா அலுவலகங்களிலும் நேரம் தவறாமையைத் தீவிரமாகக் கடைப்பிடிக்கவேண் டும் என்று சட்டம் கொண்டு வருவேன்.

> **ராகமாலிகா அன்பளிப்பாக வழங்கும் பட்டுப் புடைவையைக் குலுக்கல் முறை யில் பெறும் அதிர்ஷ்டசாலி:-**
>
> **செல்வி- வ. வசுதா,**
> **24, ராமன் தெரு,**
> **சென்னை-600017.**



✕ கோவில் கோபுரம் மணிகர்ணிகை குளம்

திரிபுராரி என்ற பிராம்மணன் காசிக்குப் போனான். எதிரே ஒரு திவ்ய சுந்தரியான பெண் தோன்றினாள். தனியே வரும் பெண்ணைக் கண்டு ''எங்கே போகிறாய்?'' என்று கேட்டான். ''நான் யமுனை நதி. சிவராத்திரியில் மணிகர்ணிகையில் நீராடுவதற்காக வேதாரண்யம் போகிறேன்'' என்றாள். திரிபுராரி காசிக்குப் போவதை அறிந்து கொண்டு, ''நீ வேத வனத்துக்குப் போய் அங்கே உள்ள தீர்த்தத்தில் மூழ்கினால் உன் பாபங்கள் தொலையும். அதன் பிறகே கங்காதேவி காட்சி தருவாள்'' என்றுகூறினாள். புண்ணிய நதிகளின் தேவதைகள் பாபங்களை மக்கள் நதிகளில் கழுவுவதால் ஏற்படும் தோஷங்களை சிவராத்திரி புண்ணிய காலத்தில் வேதாரண்யம் மணிகர்ணிகையில் மூழ்கிப் போக்கிக் கொள்கின்றனர்.

தியாகராஜா குடிகொண்டுள்ள ஸப்த விடங்கத் தலங்களில் சந்தியாகாலம் விசேஷமானது. அதோடு 'வேதாரண்யம் விளக்கழகு' என்றும் கேள்விப்பட்டிருந்தபடியால்மறைக் காட்டுறையும் மணாளரையும், யாழைப் பழித்த மொழியுமையாளையும் தரிசிக்க மாலை வேளையில் செல்கிறோம். கிழக்கோபுர வாசல் வழியாக உள்ளே சென்றால் இடது பக்கம் மணி கர்ணிகை தீர்த்தம். ராமபிரான் வேண்டியதால் சிவபெருமான் உச்சிக்காலத்தில் தோன்றியபோது இந்தத் தீர்த்தமும் உண்டாயிற்று. ஆகையால் இங்கே உச்சிக் காலத்தில் ஸ்நானம் செய்வது மிகவும் விசேஷம். காசியிலுள்ள மணிகர்ணிகை கட்டம் எவ்வளவு சிறப்புடையதோ, அவ்வளவு சிறப்புடையது இந்தத் தீர்த்தம்.

திருவிளையாடல் புராணம் பாடிய பரஞ்சோதி முனிவர் பிறந்த பதி. தாயுமான அடிகள் அவதரித்த தலம்.

நந்தி பகவானைச் 'சுற்றிச் சுவர் எழுப்பப் பட்டிருக்கிறது. சுவாமி சந்நிதிக்கு நேரே மட்டும் இடிக்கப் பட்டிருக்கிறது. வான் மழை பொய்க்கும் காலங்களில் முன்புறமும் சுவர் எழுப்பி நந்திதேவர் மூழ்கும் வண்ணம் நீர் நிரப்பி வருண ஜபம் செய்வார்களாம். மழை பெய்யுமாம்.

வன்னி மரத்தடியில் விசுவாமித்திர முனிவர் வீற்றிருக்கிறார். அவர் அருகே ஒரு பெரிய கிணறு. விசுவாமித்திர தீர்த்தம் மிகவும் பரிசுத்தமானது என்றும், இந்த நீரின் மூலம் நோய்களை பரவாது என்றும் கூறுகிறார்கள். மூவேந்தர்களுக்கும் இந்தத் தலத்தில் மிகுந்த ஈடுபாடு உண்டு என்பதற்குச் சான்றாக சேர சோழ, பாண்டிய லிங்கங்கள் பிராகாரத்தில் உள்ளன. மேலக் கோபுர வாயிலை நோக்கி விநாயகர் சந்நிதி. இவரை வீரகத்தி விநாயகர் என்று அழைக்கிறார்கள். இராவணனைக் கொன்றதால் ராமபிரானைத் தொடர்ந்த பிரும்மஹத்தியை அடக்கிய பெருமான்.

# வேதாரண்யம் விளக்கழகு

# தெய்வ தரிசனம்

கோவில் சுவர்களில் கல்வெட்டுமயம். நமக்கு என்ன புரியப் போகிறதென்று மேலே நடக்கிறோம். துவஜ ஸ்தம்பத்தைக் கடந்து உள் பிராகாரத்தை அடைகிறோம். தியாகராஜ சுவாமி ஸந்நிதிக்கு நேரே எப்போதும் தவாராக நிற்கும் நந்திகேசுவரரைத் தரிசித்துக் கொண்டு, சுந்தரமூர்த்தி நாயனாரையும், பரவையாரையும் வணங்கி வலம் வருகிறோம். நாயன்மார்களைத் தரிசித்துக் கொண்டு வரும்போது நமக்கெதிரே 'காட்சி தந்த நாயகர்' காட்சி தருகிறார். வலது காலை சுவஸ்திகமாகக் கட்டி, ரிஷபத்தின் மீது வலது கையை ஊன்றிய பாவனையோடு பக்தர்களைக் கண்ட மகிழ்ச்சி முகத்தில் மிளிர உமாதேவியோடு காட்சி தந்து கொண்டே இருக்கிறார்.



துர்க்கை அம்மன்

வேதாரண்யேஸ்வரர் திருக்கல்யாணக் கோலம்



பின் பிராகாரக் கோடியில் சுப்ரமணியரும், குதை சிற்பமாகக் கஜலக்ஷ்மியும் வீற்றிருக்கிறார்கள். பின்னால் சுரங்கப்பாதை இருக்கிறதாம். இறங்கிப் பார்க்கவில்லை.

அடுத்ததாகக் கலைமகளின் ஸந்நிதி. இது என்ன? வீணை எங்கே? ஏடுகளை மட்டும் கரத்தில் தாங்கி த்யானம் செய்கிறாளே! அம்பாள் இங்கே 'யாழைப் பழித்த மொழி உமையாள்' என்ற பெயருடன் கோயில் கொண்டிருப்பதால் இந்த இடத்தில் நமக்கு வீணை எதற்கு என்று எண்ணிவிட்டாளோ?

தெற்கு நோக்கிய துர்க்கையம்மன் மிக அழகாக விளங்குகிறாள். சங்கு சக்கரம் தாங்கி மகிஷத்தின் சிரத்தின் மீது நிற்கும் கோலம். தாமஸ குணத்தை அடக்கி அருளும் தேவி. அங்கு கூடியுள்ள கூட்டத்தையும், அலங்காரங்களையும் பார்த்த உடனேயே வரப்பிரஸாதியான அம்மன், செல்வாக்கு மிகுந்தவள் என்று புரிந்து விடுகிறது. மஞ்சள் குங்குமம், சரடு முதலியவற்றை மந்திரித்து வாங்கிக் கொள்ளுகிறார்கள்.

வாத்ய முழக்கமும், மணி ஓசையும் கேட்கிறது. தீபாராதனையைக் காண ஆவலுடன் சுவாமி சந்நிதிக்கு விரைகிறோம். திருவிளக்குகள் ஏற்றப்பட்டு ஜகஜ்ஜோதியாக இருக்கிறது. வாயில்கள் தோறும் லிங்க வடிவிலேயே விளக்குகள் பொருத்தப்பட்டிருப்பதால் லிங்கத்துக்குள் சிவலிங்கமாகத் தெரிகின்றன. முன் காலத்தில் கடற்கரையிலிருந்தே தீபவரிசைகள் தெரியுமாம். 'வேதாரண்யம் விளக்கழகு' என்பதன் பொருள் விளங்கி விட்டது

மரகத மணியாகச் சோபிக்கும் புவனி விடங்கருக்கு அபிஷேகமாகிறது. அருகிலேயே நீலோத்பலாம்பாள் தோழிகளுடன் காட்சி தருகிறார். தியாகராஜா உலா புறப்படும் போது மெல்ல மெல்ல ஹம்ஸத்தைப் போல நடந்து வருவார்களாம். அதனால் ஹம்ஸபாத நடனம் என்று பெயர்.

திருமறைக் காட்டீசருக்கு அலங்கார தீப ஆரத்திகள் செய்து சாவதானமாக அவசரப்படாமல் ஷோடசோபசார பூஜை செய்கிறார் திரு. ஷண்முக குருக்கள். அதுவும் ஓர் அழகிய கலையாகத் தோன்றுகிறது. கருவறையின் உள்ளே சில சரவிளக்குகள் தொங்குகின்றன. சிவலிங்கத் திருமேனியின் பின்னால் நட்சத்திர விளக்கு இல்லை. நிழல் வடிவமாக ஈசனும், தேவியும். வயது முதிர்ந்த குருக்கள் ஒருவர் ஸ்ரீருத்ரம் சொல்லிக் கொண்டிருந்தார்.

ஒருநாள் இரவில் சந்நிதியிலுள்ள தீபம் மங்கிய போது ஈசன் உமையிடம் ''இந்த விளக்கைத் தூண்டுபவன் திரிபுவனங்களையும் ஆளும் சக்கரவர்த்தியாவான்'' என்று கூற, தேவி நகைத்து, ''அர்த்த ஜாமத்தில் யார்

ஆனந்தி

இங்கு வந்து விளக்கைத் தூண்டப்போகிறார்கள்?'' என்று கூறினாராம். விளக்கிலிருந்த எண்ணெயை மணத்தால் அதில் ஏறிய எலியின் வால் தூண்டியதால் விளக்கு சுடர்விட்டு எரிந்தது. அந்த எலியே ஈசன் விளக்கைத் தூண்டிய மகத்தான புண்ணியத்தால் மகாபலிச் சக்கரவர்த்தியாகப் பிறந்து எண்ணற்ற யாகங்களைச் செய்து திருமாலின் திருவடி தீட்சை பெற்றதாம்.

ஓதுவார் திருமறைக்காட்டுப் பதிகம் பாடுகிறார். பதிகம் ஓதியதும் உள்ளே சென்று அருகில் நின்று தீபாராதனை செய்கிறார் குருக்கள். சிவலிங்கத் திருமேனியைத் தரிசித்த பிறகு உயரத் தூக்கி மறைக்காட்டுறையும் மணாளரையும் பார்வதி தேவியையும் நன்றாகத் தரிசனம் செய்யும் வண்ணம் நிதானமாகத் தீபாராதனை செய்கிறார். சிவன் கோவில்களில் திருவுண்ணாழியில் ஈசனோடு உமையைக் காண்பது அரிது. அதுவும் அகத்திய முனிவருக்காகக் காட்சியளித்த கோலம். சந்தனக் காப்பு அணிவித்திருக்கிறார்கள். மல்லிகை மலர் மாலைகள் சூட்டி அலங்காரம் செய்த கோலம்.

வாத்திய முழக்கத்தோடு ஒவ்வொரு சந்நிதியாகத் தீபாராதனை செய்து கொண்டு வருகிறார்கள். அம்பாள் கோவிலில் இரண்டு அழகிய பாவை விளக்குகள் நமது கவனத்தைக் கவருகின்றன. சுந்தரமூர்த்தி நாயனார் இந்தத் தேவியை வைத்தே தம் முதல் பதிகத்தைத் தொடங்குகிறார்.

யாழைப்பழித் தன்ன மொழி
மங்கையொரு பங்கன்
பேழைச்சடை முடிமேற் பிறை
வைத்தான் இடம் பேணில்
தாழைப்பொழி லூடே சென்று
பூழைத் தலை நுழைந்து
வாழைக் கனி கூழைக் குரங்
குண்ணும் மறைக் காடே.

சிவபெருமானின் சடையில் ஏகப்பட்ட பொருள்கள். ஆதிசேடன், நக்ஷத்திர மண்டலங்கள், சந்திரன் எல்லாம் இருப்பதால் பேழைச் சடை என்று கூறுகிறார் சுந்தரர். கடற்கரைக்கு உரிய தாழையையும், வளம் நிறைந்த வயல் சார்ந்த இடத்துக்கு உரிய வாழையையும் கூறியிருக்கிறார். பூஜை முடித்த உடனே அன்னபூர்ணாஷ்டகம் பாடித் துதிக்கிறார் ஓதுவார். இன்ப வடிவமான தேவி எழில் வடிவமாகவும் இகழ்வதைக் கண்ட மகிழ்ச்சியோடு சந்நிதி எதிரே உள்ள புன்னை மரத்தடியில் சற்று அமருகிறோம். மரத்தடியில் உபநிஷதபாத்திரங்களான நசிகேதஸ் சுவேதகேது இருவருக்கும் சிலைகள் இருப்பதைப் பார்க்கிறோம். சரபுன்னையும் தல விருக்ஷம்.

வேதாரண்யத்தில் ஐந்து தீர்த்தங்களில் நீராடுவது முக்திதரும் என்று கூறுகிறார்கள். ருத்ரகோடி, ஆதிசேது, வேத தீர்த்தம், சந்நிதிக்கு முன்புள்ள கடல் தீர்த்தம், கோவிலுள்ளே இருக்கும் மணிகர்ணிகை இவற்றில் அமாவாசை முதலிய புண்யகாலங்களில் நீராடுவது விசேஷம்.

கோடிக்கரையில் பிரும்ம தேவருக்கு ஈசுவரனே வேதங்களை உபதேசித்ததாகத் திருமறைக்காட்டுத் தலபுராணம் கூறுகிறது. அத்தகைய வேதங்கள், நியமம் தவறிய அந்தணர்களால் ஓதப்பட்டு நலிவடைந்தன. நான்கு வேதங்களும் வேத புருஷர்களாகி இந்த இடத்துக்கு வந்து வேதாமிர்தம் என்ற ஏரியை வெட்டி அதில் மூழ்கி ஈசனைக் குறித்துத் தவம் செய்தார்கள். இவர்களுக்காகவே வேதாமிர்த தீர்த்தத்துக்கு எதிரே இன்னொரு கோவில் இருக்கிறது. ஈசன் இங்கே மேற்குப் பார்த்து வீற்றிருக்கிறார். இங்கே நான்கு வேதங்களையும் வேத புருஷர்களாக எழுந்தருளப் பண்ணியிருக்கிறார்கள். மார்கழி மாதத்தில் ரிஷப வாகனத்தில் மறைக்காட்டீசர் இங்கு வருவாராம். தீர்த்தம் அளிப்பாராம்.

சுவாமி காசி விசுவநாதர். அம்பிகையின் பெயர் விசாலாட்சி. இந்தக் கோவில் சமீப காலத் திருப்பணி என்று கூறினார்கள். எந்தக் காலத்துத் திருப்பணியாக இருந்தால் என்ன? வேதங்களுக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டிருக்கிறது. கூப்பிய கரங்களுடன், அழகிய திருவாசிகளால் அலங்கரிக்கப்பட்டு வேத புருஷர்கள் ஈசனைத் துதிக்கும் நிலையில் காணப்படுகின்றனர். ஞானசம்பந்தர் பெருமான் ''வேதங்கள் போற்றி மலரால் வழிபாடு செய் மாமறைக் காடர்'' என்று பாடுகிறாரே.

அப்பர் பெருமானும், ஞான சம்பந்தரும் தல யாத்திரை செய்து கொண்டு வேதாரண்யம் வந்த போது சுவாமி சந்நிதிக்கு நேரே இருந்த வாசல் கதவுகள் திறக்க முடியாமல் இருந்தனவாம். வேதங்களே இந்தக் கதவுகளை அடைத்ததாகவும், அது முதல் சாத்தியே இருப்பதாகவும் அறிந்த நாவுக்கரசர், ''கண்ணினாலுமைக் காணக் கதவினைத் திண்ணமாகத் திறந்தருள் செய்மினே.'' என்று பாடினார். உடனே கதவுகள் திறந்து கொண்டன. ஞானசம்பந்தர் பெருமான் தரிசனம் முடிந்த பின், ''கதவந் திருக்காப் புக்கொள்ளும் கருத்தாலே'' ''சதுரம் மறைதான்'' என்று தொடங்கும் பதிகம் பாடியதும் கதவுகள் தாமே மூடிக் கொண்டன.

இப்படியெல்லாம் அன்பு செய்வார் சொன்னபடியெல்லாம் செய்யும் வள்ளல் மணவாளநாயகர்.

அகத்தியரும், விசுவாமித்ரரும், வசிஷ்டரும், முசுகுந்த சக்கரவர்த்தியும், சுவேத முனிவரும், நசிகேதஸும், யாக்ஞவல்கியரும், நாரதரும் வழிபட்ட தலம் என்று தல புராணம் கூறுகிறது.

இத்தகைய வேதாரண்யம் தஞ்சை மாவட்டத்தில் இருக்கிறது. திருத்துறைப்பூண்டி ரயில் நிலையத்திலிருந்தும், மன்னார்குடியிலிருந்தும், நாகப்பட்டினத்திலிருந்தும், பேருந்து வசதி இருக்கிறது.

க்ஷேத்ராடனம் என்றாலும் சரி, உல்லாசப் பிரயாணம் என்றாலும் சரி, குடும்பத்துடன் சென்று மகிழக் கூடிய தலம் வேதாரண்யம். சென்றுதான் பாருங்களேன்.



ஒரு புதிய அழைப்பு

# சுவையல்ல, சுமை!

நா. காமராசன்

❋ சரித்திரச் சக்கரத்தை நல்வழியில் செலுத்துபவர்களே தலைவர்கள். அந்தச் சக்கரத்தில் கரும்பைப் பிழிபவர்களுக்கு அது ஒரு சுவையாகி விடுகிறது. அதே சக்கரத்தில் எண்ணெய் வித்துக்களைப் பிழிந்தால் அது ஒரு சுமையாகி விடுகிறது. சுவையைப் பெறுவதைவிட சுமையை ஏற்பதே தலைவனின் கடமை.

❋ வாழ்வின் தொண்டு அரசியல். அது வாழ்க்கைத் தொழிலாகவும் பல நேரங்களில் மாறிவிடுகிறது. அரசியல்வாதிக்கு அதிகாரம்கிடைக்கிறது. அதை அவன் சமுதாயத்தோடு பகிர்ந்து கொள்ளவேண்டும்; தனது குடும்பத்தோடு பங்கு போட்டுக் கொள்ளக் கூடாது. அரசியலில் பரபரப்பு வந்தால் அது அதிகாரத்திற்கு வழிவகுக்கிறது; அமைதி வந்தால் அதுவே சேவைக்கு உதவி செய்கிறது.

❋ ஆனால் - மக்களின்அன்பை வைத்துப் பதவிக்கு வரும் அரசியல்வாதி— அங்கே வந்தவுடன் தனது அதிகாரத்தின் சக்தியை மட்டுமே உணர்கிறான்.

❋ கோளாறுகளைத் திருத்தத் தேவையான அழுத்தம் . மிகுந்த அமைதியே அரசியல்வாதியின் ஆபரணம். ஆர்வக் கோளாறுகளை உருவாக்கும் பரபரப்பு அவனுக்கு விலங்காகி விடும். ஆபரணத்தை அவன் சமுதாயத்திற்குப் பூட்டினால் அது சரித்திரம். சமுதாயம் அவனுக்கு விலங்கு பூட்டினால் அது சாபக்கேடு. அவன் முள்கிரீடம் சூடிக் கொண்டால் சமூகம் ரோஜாப் பாதையில் நடக்கும். அவன் மலர்க் கிரீடம் சூடிக் கொண்டால் பொது மக்களுக்கு மிஞ்சுவது முள் பாதை மட்டுமே.

❋ அரசியல் ஈடுபாடு பொழுதுபோக்காக இல்லாமல் — அது ஒரு மெய்யான மனிதப் பண்பாக வளர்க்கப்பட வேண்டும். ஒளிமயமான பொறுப்புணர்ச்சியை விட்டுவிலகும் போது பகட்டாக மினுமினுக்கும் போலித் தோற்றங்களின் கவர்ச்சி வெற்றி பெற்று விடுகிறது.

❋ சமூக அமைப்பில் ஏற்பட்ட தவறுகளை எதிர்த்துப் பற்றவைக்கப்பட்ட கண்டனக் கனல் அணையாமல் பார்த்துக் கொள்வதே அரசியல்வாதியின் 'கடமை. ஆனால் சமுதாயம் அவன் மீது கண்டனக் கனல் வீசக் கூடிய நிலைமை அவனுக்கு . ஏற்பட்டு விடுகிறது. சமுதாயக் கனலின் சுமை எப்போதும் அவன் இதயத்தில் இருக்கவேண்டும். தனது கனலின் சுவையை அங்கே அவன் வளர்த்துவிடக் கூடாது.

---



## இரத்தம் எடுக்காமல் இரத்தப் பரிசோதனை!

இரத்தப் பரிசோதனைக்கு வருபவர்கள் தங்கள் உடலிலிருந்து ஒரு துளி இரத்தம் கூடச் செலவழிக்காமல், மேற்கு ஜெர்மனியில் இரத்தப் பரிசோதனை செய்து கொள்ளலாம்!

நோயாளி உதடுகளை ஒரு 'லெஸ்லர்' பிளேட்டில் அழுத்துகிறார். அப்போது இரத்தத்தில் அடங்கியுள்ள சர்க்கரை, கொழுப்பு, யூரியா, ஆல்கஹால் இவைகளின் அளவுகளை ஒரு 'இன்ஃப்ரா — ரெட் லெஸ்லர்' கணித்துக்காட்டுகிறது!

—ப. கந்தசாமி.

# மாமன் மச்சான்

ஆனாலும் டைரக்டர் ராமநாராயணனுக்குத் தன்னம்பிக்கை மிகமிக அதிகம் தான்.

பின்னே என்னவாம்?

எங்க வீட்டுப் பிள்ளை காலத்திலிருந்து உருண்டு கொண்டிருக்கும் அதே ஆள் மாறாட்டக் கதையை வைத்துக்கொண்டு மறுபடியும் ஒரு படம் பண்ணிப் பார்த்திருக்கிறாரே!

லண்டன் ரிட்டர்ன்(!) விஜயகாந்த் தன் கத்தி, அரைபிளேடு இன்னபிற தொழிற்கருவிகள் நிரம்பிய பெட்டியைத் தவறவிட்டு(!) ஸ்டெத், ஸிரிஞ்ச் அடங்கிய பெட்டியுடன் டாக்டராக வந்து இறங்கி— இங்கே, எஸ். வி. சேகர் டிட்டோவாய் பெட்டியை மாற்றிக் கொண்டு பாக்கெட் அடிக்கும் கூட்டுக் குடும்பத்துடன் போய்ச் சேர்ந்து — சினிமாவில் தான் பார்க்க முடியும்.

விஜயகாந்த் — அந்த அகலக்கண்களை மேலும் அகலமாய் விரித்து என்னமாய் முழிக்கிறார்!

எஸ். வி. சேகர் — சாதாரணமாகவே அசடு விட்டர் விட்டராய் வழியும் முகம். இதில்? கேட்க வேண்டுமா என்ன?

ஒரு கால கட்டத்தில் அனுராதாவை ஆட்ட அரங்கத்தில் நுழைத்த மாதிரி இதில் பொன்னி.

லிஸ்டில் இருக்கிற சின்னப்பையன்கள் எல்லாம் அண்டா, தகர டப்பா, கருட்டின அரச இலை என்று ரகவாரியாய் வைத்துக் கொண்டு கச்சேரி செய்கிற மாதிரி இதில் சங்கர் — கணேஷ்.

அட்டகாசமாகத் தலைவரை பின்னணியில் வைத்தே கதையை ஓட்டும் போது தலைவரைத் தெரிந்து கொள்ளும் ஆவல் இருந்தது சரிதான். ஆனால் கடையில் உழக்கு உயரத்திற்கு ஒருவரைக் காட்டி இவர்தான் தலைவர் என்னும்போது....

வி. கே. ராமசாமி, வெ. ஆ. மூர்த்தி, ராதாரவி, எஸ். எஸ். சந்திரன் — ஆகியோரும் நடித்திருக்கிறார்கள் லிஸ்டில் இடம் பெறுபவர்கள். இன்னும் என்னத்தை சொல்ல?

—ஜெயமன்மதன்














''இவர் நமதுகட்சி சி.த.கா ...
என்னு முளிக்கறீங்க? புரியலியா?
அதாவது சினிமா தமிழ் காப்
பாளர்!''

''என்னங்க, கட்டை சினிமாப்
போலாம்னு சொல்லிட்டு....
இங்கே இப்படியே நின்னு?...''
''அதுவும் திரைக்காட்சிதான்.
இதுவும் திரைக்காட்சிதான்.
இதையே பார்ப்போம்!''

# தமிழை இழிவு படுத்தாதே! புரட்சித் தலைவர் கட்டளை!

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600032. (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani

Editor: K. Rajendran

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

# 6 வாரங்களில் அற்புதம்

## கிளியர்•டோன் சிகப்பழகு சாதன க்ரீம், உங்களுக்கு அளித்திடும் புது ரூபம்.

முதல் வாரம்




மூன்றே நாட்களில் என் மேனி மிருதுவாகத் தொடங்கிவிட்டது.

2-ம் வாரம்



என் மேனியில் 'மெருகேறி'யிருக்கிறது என்கிறாள் என்தோழி.

3-ம் வாரம்



பழைய பருத் தழும்புகள் மறையத் தொடங்கி விட்டன. அப்பா! பெரிய விடுதலை!

4-ம் வாரம்



சொரசொரப்பான முழங்கைகள் கூட மிருதுவாகி விட்டன...மூன்றே வாரங்கள் கிளியர்•டோன் உபயோகித்ததில்.

5-ம் வாரம்



வெயிலில் போனாலுங்கூட எப்படிக் கறுக்காமல் இருக்கிறேன் என்பது பெரிய ஆச்சரியம்.

6-ம் வாரம்



நான் இப்பொழுது ஒரு கிளியர்•டோன் விசிறி. என் மேனியை சிவப்பழகுடன் வைத்திருக்க அது செய்திருக்கும் சாதனையைப் பாருங்கள்.

**கிளியர்.டோன்** இதன் ஈடில்லா, பார்முலா உங்கள் மேனியை மென்மையாக மெருகேற்றிச் சிவப்பாக்குகிறது. அது மட்டுமல்ல. **கிளியர்.டோனில்** உள்ள ஒரு தனிச் சிறப்புப் பொருள், அருவருப்பூட்டும் அந்த மாசு மறுக்களை அகற்றுகிறது. அதன் செழிப்பான ஈரச் சத்து, உங்கள் மேனிக்கு, ஆறே வாரங்களில், கண்கூடான புத்தழகு மென்மையும் பொலிவும் தருகிறது. மலர்ந்த அந்த அழகு தொடர்ந்து நீடிக்க, வீட்டினுள் இருந்தாலும் வெயிலில் சென்றாலும் தினம் இருமுறை தவறாது **கிளியர்.டோன்** உபயோகித்து வாருங்கள்.




பலநாட்டுலகிலும் புகழ்பெற்றது.

உயரிய ஃபார்முலா ஓங்கிய சக்தி

**கிளியர்•டோன்** சிகப்பழகு ரகசியம்– இயற்கையாய் உமக்கே

பாரிஸ் . லண்டன் . நியூயார்க்

daCunha/NICL/36/83 TM